# இந்தியாவுக்கு டாலர்களை அள்ளித்தரும் ஆடைகள்!



KALKI
9.2.86
ரூ.1.50



# கல்கி

# புத்தாடை போல் வெண்மை !

**சலவை தோறும் பொலிவு... சலவைக்கு சலவை... பவர் பேக்டு ஸர்ஃப் புத்தாடைபோல் வெண்மை பொலிய வெளுக்கிறது !**

வெளுக்கும் ஒவ்வொரு சட்டைக்கும், ஒவ்வோர் ஆடைக்கும் வெண்மை மிடுக்கு, புதுமைக் கருக்கு அளிக்குது பவர் பேக்டு ஸர்ஃப். அன்றன்றே வாங்கி அணிவது போல் என்றென்றும்... கோடித் துணிபோல் கோலப் புதுமை.

இதுவரை இல்லாத ஏற்றமான சக்தி செறிந்து வருகுது பவர் பேக்டு ஸர்ஃப்... பேராற்றல் மிகுந்தது. பேணிக் காப்பதில் உயர்ந்தது. ஆழ ஊடுருவித் துப்புரவாக்கும் சக்திபடைத்தது; அடைக்கிராத அமோகமான நுரைவளம் மிகுந்தது.

விடாத அழுக்கையும் விரட்டியடிக்கும், வெண்மையினை வாழ்விக்கும், காலமெல்லாம் துணிப் புதுமை காக்கும்.

வெண்ணிறமோ, வர்ணமோ... விசேஷத் துணிகள், அன்றாடத் துணிகள் எல்லாமே ஒளிமிளிரும் ஒப்பற்ற வெள்ளைவெளேர்... ஸர்ஃப் சலவையிலே... நித்தமும் நிலைபெறுமே புத்தாடைக் களையுடனே.

சலவைப் பவுடர்கள் பலநூறு இருக்கலாம், ஆனால் உங்கள் குடும்பத் துணிகளுக்கு நம்பிக்கையானது ஸர்ஃப் ஒன்றுதான்... ஸர்ஃப் அன்றி வேறில்லை.




**ஸர்ஃப் சலவை: ஒப்பற்ற வெள்ளைவெளேர், சகல துணிகளுக்கும் புதுமை ஜோர்!**

LINTAS

கவர் ஸ்டோரி



**தோல் பதனிடும் தொழில் — வர்த்தகத்தில் இந்தியாவிலேயே முதலிடம் வகிப்பது தமிழகம்தான். இந்தத் தொழில் — வர்த்தகத்தின் முக்கியத்துவத்தை உணரச் செய்ய, சென்னை வள்ளுவர் கோட்டத்தில் சர்வதேசத் தோல் பொருட்காட்சி பிப்ரவரி 6 வரை நடைபெறுகிறது.**

# ஒரே நாளில் ஒரு கோடி ரூபாய்!

சென்னை மாநகராட்சியின் 'ரிப்பன்' கட்டிடத்துக்குப் பக்கத்தில், அதன் வெளிச் சுற்றுச்சுவரையொட்டினாற்போல்ஓர் அகன்ற சாலை செல்கிறது. அதோடு சற்றுத் தூரம் போனால் இடது பக்கம் திரைய சந்து பொந்துகள். சுற்றுப்புறப் பகுதிகளுடன் ஒப்பிடும் போது மேட்டுப்பாங்கான இந்த இடத்தின் பெயர் பெரிய மேடு.

இந்தப் பெரியமேடின் சந்து பொந்துகளைச் சுற்றி வந்தால் பழங்காலக் கட்டடங்களையும் கைவண்டி இழுக்கும் கூலிக்காரர்களையும் சாப்பாட்டுக் கூடைக்காரிகளையும் தரிசிக்கலாம். கடைய்யா, கண்ணியா, பரபரப்பா ஒன்றுமிராது. ஆனால் இந்த இடத்திலிருந்துதான் இந்தியாவிலேயே மிக அதிகமாக நாளொன்றுக்குச் சுமார் ஒரு கோடி முதல் ஒன்றரைக் கோடி ரூபாய் வரை வியாபாரம் ஆகிறது. ஆமாம், ஒரே நாளில் தான்! அதுவும் ரூபாய் வியாபாரம் அல்ல. ஏற்றுமதி வியாபாரம். நாளொன்றுக்கு

ரூ. 1½ கோடி பெறுமானமுள்ள டாலர்களைச் சம்பாதித்துத் தரும் அந்த வியாபாரம் என்ன? சற்று நின்று உங்கள் மூக்கை விசாரிக்கவும். இதற்குள் தோல் வாசனையை அது உணர்ந்திருக்க வேண்டுமே! இங்கே தோல் பதனிடப்படுவதில்லை. பதனிடப்பட்டு வரும் தோலைச் சேகரம் செய்து வைக்கிறார்கள். 'மூட்டை' கட்டி ஏற்றுமதி செய்கிறார்கள். அதனால் வாசனை இலேசாகவே இருக்கும். மூக்கைத் துளைக்காது!

இந்தப் பழங்காலக் கட்டடங்களில் ஒன்றுக்குள் புகுந்து பார்ப்போமா? கிடங்கு. அடுக்கடுக்காக 'பேல்'கள். படியேறித் திரும்பினால் அட! இது என்ன, மிக நவீனமான, கண்ணாடிச் சுவர்களுடன் கூடிய காரியாலயம்! டைப் ரைட்டர்களின் கிளிக் கிளிக், டெலக்ஸ்களின் டடக் டடக். அங்கே ஓர் ஏ. ஸி. அறையில் கண்ணாடிச் சுவருக்கு

* தோல் உடையில் ஒரு 'ஃபாஷன்' பெண்!



அப்பால் தெரியும் கம்ப்யூட்டர். மாடர்ன் மேஜை நாற்காலிகள். டீக்காக உடையணிந்து அமர்ந்திருப்பவர்கள் பரபரப்பாகப் ஃபோனில் பேசிக் கொண்டிருக்கிறார்கள்; அல்லது சுறுசுறுப்பாக எதையோ எழுதித் தள்ளிக் கொண்டிருக்கிறார்கள்.

**மையக் கேந்திரம் தமிழகம்தான்!**

பெரியமேட்டின் அழுது வடியும் புறத்தோற்றத்துக்கும் உள்ளே காணப்படும் கலகலப்புக்கும் சம்பந்தா சம்பந்தமே இல்லையே என்று நமக்குத் தோன்றும். ஆனால் இந்தியத் தோல் உற்பத்தி, ஏற்றுமதி வியாபாரத்தில் தமிழகம்தான் மையக் கேந்திரம் என்றால் அந்த வர்த்தகத்தில் தமிழகத்தின் மையக் கேந்திரம் இந்தப் பெரியமேடுதான்! காரணம் என்ன? துறைமுகத்துக்கு அருகில் இருப்பது ஒன்று. முஸ்லிம்கள் அதிகமாக வாழ்கிற பகுதி என்பது மற்றொன்று. அவர்களுக்குத் தோல் தொழிலும் வியாபாரமும் இயல்பாக இருந்தது. ஆனால் சமீப காலமாக நிலைமை மாறிவிட்டிருக்கிறது. ஹிந்துக்களிலும் பலப்பலர் இந்தத் தொழிலில் — வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள் — ஆசார சீலர்களான சில பிராமணர்கள் உள்பட! சற்று யோசித்தால் இதில் முறைகேடோ, முரண்பாடோ இல்லை என்பது புரியும். தோலுக்காகச் சாதாரணமாக எந்தப் பிராணியும் கொல்லப்படுவதில்லை. புலாலுக்காகத்தான் கொல்லப்படுகிறது. எனவே தோல் பதனிடும் தொழிலும் வியாபாரமும் உப தொழில்களே. ஆனால் இந்த உப தொழில்கள்தாம் இன்று மூலத்தைக் காட்டிலும் மிகப் பெரிதாக வளர்ந்து லாபகரமாகவும் அந்நியச் செலாவணி ஏராளமாய்ச் சம்பாதித்துத் தருவனவாகவும் விளங்குகின்றன.

ஒரு காலத்தில் இந்தத் தோல் வியாபாரத்தின் தலையெழுத்தை நிர்ணயித்து வந்தது பிரிட்டனில் நடக்கும் ஓர் ஏலம்தான். கச்சாத் தோலை வரவழைத்து ஏலம் விடுவார்கள். தோல் வீணாகாதிருக்க உப்பிலே ஊறப்போடுவார்கள். தோலிலிருந்து நீர் வடிந்து விட்டதும் முடி எடுப்பதற்காகச் சுண்ணாம்பு நீரில் தோய்த்தெடுப்பார்கள். இவை முடிந்ததும் தோல் ஏற்றுமதியாகிவிடும். இந்தக் கச்சாத் தோலை வாங்கி மேல்நாட்டினர் பலவாறு அபிவிருத்தி செய்து பயன்படுத்தி வந்தனர்.

**அரசு புகுந்தது:**

**லஞ்சமும் நுழைந்தது!**

சுதந்திரம் பெற்ற பிறகு விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. இப்படிக் கச்சாத் தோலை அனுப்புவதால் நமக்கு ஏராளமான பணம் நஷ்டமாவது உணரப்பட்டது. தோலை மேலும் பதப்படுத்திப் பலவாறாக அபிவிருத்திசெய்து முழுமை பெற்ற தோலாகவோ (Finished Leather) அல்லது பாதி அளவேனும் முழுமை பெற்ற தோலாகவோதான் ஏற்றுமதி செய்ய வேண்டும் என்று கட்டளை பிறந்



* 1986 - தோல் சர்வதேசக் கண்காட்சியில் டாட்டா எக்ஸ்போர்ட்ஸ் லிமிடெட் ஸ்தாபனத்தின் உதவித் தலைவர் எஸ். ஆர். ஏ. அய்யர் மூன்று பரிசுகளை மத்திய சர்க்கார் மந்திரி சிவ்சங்கரிடம் பெறுகிறார்.*

தது. உடனே பலர் எங்களுக்கு அதற்கான வசதிகள் இல்லையே என்று முறையிட்டார்கள். அரசு கோட்டா முறையை அமுல்படுத்தியது. இன்னின்னார் இந்த இந்த அளவுக்குக் கச்சாத் தோலையும் முழுமை பெற்ற தோலையும் பாதி முழுமை பெற்ற தோலையும் ஏற்றுமதி செய்யலாம் என்று கோட்டா வழங்கியது. அரசு தலையிட்டு பர்மிட் லைசென்ஸ் கோட்டா என்று ஆரம்பித்ததும் கூடவே லஞ்சமும் ஊழலும் புகுந்து கொண்டன! அப்புறம், அந்நியச் செலாவணி நிறையக் கிடைக்கிற தொழில் இது என்பதால் அரசு பலவித சலுகைகளை ஏற்றுமதியாளருக்கு அளிக்க முன் வந்தது. சலுகைகள் கிடைக்கும் என்றதும் எங்கே எங்கே என்று காத்திருக்கும் பெரிய பெரிய கம்பெனிகளின் கவனம் தோல்வியாபாரம் பக்கம் திரும்பியது. இன்று டாட்டா என்ன, மஃபட்லால் என்ன, காம்பா—கோலா தயாரிக்கும் நிறுவனம் என்ன என்று எல்லாரும் தத்தமது வாடிக்கையான நடவடிக்கைகள் தவிரத் தோல் வியாபாரத்திலும் தீவிரமாக இறங்கிவிட்டிருக்கிறார்கள். சலுகைகளைப் பெறப் போட்டா போட்டி அதிகரிக்கும்போது லஞ்ச ஊழலும் அதிகரிக்கிறது. போதாதகுறைக்குச் சலுகைகள் பெற்றுப் பழகிவிட்ட துறை, இது போதாது என்று மேலும் சலுகைகள் கேட்கிறது.

## மலை முழுங்கி!

மத்திய அரசாங்கத்தின் ஒரு நிறுவனமாக ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன் (STC) என்ற ஒரு மலை முழுங்கி மகாதேவன் இருக்கிறது! அது சும்மா இருக்குமா? எல்லாத் தோல் ஏற்றுமதியும் என் மூலம்தான் நடக்க வேண்டும் என்று கூற அதற்கு அரசு சட்டம் இயற்றியது. இப்படி உத்தரவு பிறந்ததின் பலன் என்னவென்றால் யார் தோல் ஏற்றுமதி எந்த அளவுக்குச் செய்தாலும் அதில் ஒரு சதவீதம் எஸ். டி. ஸிக்குக் காணிக்கையாகச் செலுத்திவிட வேண்டும்! இதற்குப் பிரதியாக எஸ். டி. ஸி. ஒரு சுண்டு விரலைக் கூட அசைக்காது! ஆனால் கமிஷன் மட்டும் பெற்றுக் கொழிக்கும்! எஸ். டி. ஸிக்கு அப்படி ஒரு யோக ஜாதகம்!

லஞ்ச ஊழல்கள் எல்லாம் ஒழிய ஒரே வழி கண்ட்ரோல்களை நீக்கி, சுதந்திர வர்த்தகம் நடக்கச் செய்வதுதான். அதோடு சலுகைகளையும் ஒழித்து, தொழிலையும் வர்த்தகத்தையும் சொந்தக் காலில் நிற்கச் செய்ய வேண்டும். அந்நியச் செலாவணி சம்பாதித்துத் தரும் தொழில்—வர்த்தகம் என்பதற்காக எத்தனை காலம் எங்கள் வரிப் பணத்தைச் சலுகைகளாகக் கொடுத்து அழப் போகிறீர்கள் என்று அரசைக் கேட்க வரி செலுத்தும் மக்களுக்கு உரிமை உண்டு.

## அபரிமித வேலை வாய்ப்பு!

1973ல் 70 கோடி ரூபாயாக இருந்த தோல் ஏற்றுமதி 86ல் 583 கோடியாக



* தோல் ஏற்றுமதி வியாபாரத்தின் தலைவிதியை நிர்ணயிப்பது அமெரிக்க, ஐரோப்பிய ஃபாஷன்கள்.

உயர்ந்து 87ல் 605 கோடியாக உயரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதில் தமிழகமே மையக்கேந்திரமாக விளங்கக் காரணம் என்ன?

தோல்பதனிடும்தொழிலுக்கு இன்றியமையாதது உப்பு, தண்ணீர், சுண்ணாம்பு, ஆவாரம் பட்டை. இவை இங்கு தாராளமாகக்கிடைத்ததோடு இத்தொழிலில் ஈடுபட முன்வந்த ஏராளமான ஹரிஜனத் தொழிலாளர்களும் இருந்தனர். பார்க்கப் போனால் எண்ணிக்கை அளவில் இந்தத் தொழில் அளிக்கும் வேலை வாய்ப்பு போல் வேறு ஒரு தொழில் உண்டா என்பது சந்தேகம். வட ஆர்காடில் பாலாற்றினையொட்டியும் சென்னையில் பல்லாவரம் பகுதியிலும், வேறு சில இடங்களிலும் தோல் பதனிடும் தொழிற்கூடங்கள் தோன்றின. கச்சாத் தோலை அபிவிருத்தி செய்து ஏற்றுமதி செய்யப் பிற மாநிலங்களிலிருந்து தோல் தருவிக்கப்பட்டது. ஆனால் சமீப காலமாகப் பிற மாநிலங்களும் விழித்துக் கொண்டு விட்டன. தோல் ஏற்றுமதியில் நமது மாநிலத்துக்குக் கிடைக்கக் கூடிய செல்வம் தமிழகத்துக்குப் போவானேன் என்று ஒவ்வொரு மாநிலமும் தோல் பதனிடும் தொழிலைத் தொடங்கிவிட்டது: இதனால் தமிழகத்துக்குத் தோல் வருவது குறைந்து போயிருக்கிறது. சென்னை நகரில் மட்டும் ஒரு நாளைக்குச் சுமார் 3000 முதல் 4000 வரை ஆடுகள் புலாலுக்காக வெட்டப்படுகின்றன என்றாலும் பொதுவாக நோக்குமிடத்தில் விலைவாசி உயர்வு காரணமாகத் தமிழகத்தில் புலால் உண்பது குறைந்து வருகிறது. இவ்விரு காரணங்களாலும் இங்கு தோல் தொழிலுக்கு மூலப் பொருள் பற்றாக்குறை ஏற்பட்டிருக்கிறது. அப்படியானால் இந்தத் தொழிலின் எதிர்காலம் என்ன? தமிழகத்தில்தான் இத்தொழிலும், வாணிபமும் கொடி கட்டிப் பறக்கிறது என்ற நிலை சீக்கிரமே மாறி விடாதா? இது குறித்து இந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ள ஒரு சிலரைத் தவிர மற்றவர்கள் யோசிப்பதாகவே தெரியவில்லை. விரல்விட்டு எண்ணக் கூடிய அந்த ஒரு சிலரில் ஒருவர் கூறினார்:

"கால்நடை அபிவிருத்தி ஒன்றுதான் பிரச்னையைச் சமாளிக்க ஒரே வழி. ஷானன் என்ற பெயர் பூண்ட ஒரு வகை வெள்ளாடு இருக்கிறது. அதை அயல் நாட்டிலிருந்து விமானத்தில் தருவித்திருக்கிறேன். சென்னைக்கு அருகாமையில் ஒரு மாதிரிப் பண்ணை தொடங்கிப் பரீட்சார்த்தமாகக் கால்நடை அபிவிருத்தியில் ஈடுபட்டிருக்கிறேன்."

## ஆட்டின் சிறப்புக்கள்!

மாட்டுப் பாலைவிட ஆட்டுப்பால் எவ்வளவு சிறப்பானது, சத்துமிக்கது, அதிலிருந்து வெண்ணெயும் பாலாடைக்கட்டியும் எவ்வாறு தயாரிக்கலாம், ஆட்டுச் சாணம் மாட்டுச் சாணத்தை விட வயல்களுக்கு எவ்வளவு சிறந்த எரு என்றெல்லாம் அவர் உற்சாகமாக விளக்கினார். முக்கியமான விஷயம் ஷானன் ஆட்டின் இனப் பெருக்கம் துரிதமானது. ஒரே சமயத்தில் நாலு குட்டிகள் கூடப் போடும். அதற்குத் தீனி போடுவது சுலபம். எதைக் கொடுத்தாலும் தின்னும். புலாலும் ருசியானது.

ஆட்டிறைச்சியின் விலை குறையத் தோல் ஏற்றுமதி அதிகமாகும் என்று இப்படித் தொலைநோக்குடன் செயல்படும் நபர்கள் தான் இந்தத் தொழிலில் நிலைத்து நின்று வெற்றிபெற முடியும். இதற்கு மாறாகத் துரிதமாகவும், சுலபமாகவும் பணம் பண்ண நினைத்து இந்தத் தொழிலில் இறங்கும் சிலர் படுதோல்வி அடையவும்செய்கின்றனர். அது எப்படி என்று பார்ப்போம்:

## தலைவிதியை நிர்ணயிக்கும் ஃபாஷன்!

ஒரு காலத்தில் தோல் விலையை நிர்ணயம் செய்தது பிரிட்டனில் நடந்த ஒரு ஏலம் என்று சொன்னோம். ஆனால் இப்போதெல்லாம் தோல் ஏற்றுமதி வியாபாரத்தின் தலைவிதியையே நிர்ணயிப்பது ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் நிலவுகிற தோல் ஆடை ஃபாஷன்தான். அங்கே திடீர் திடீரென்று மாறிவிடுகிற ஃபாஷனுக்கு ஏற்ப இங்கே தோலின் தரத்தையும் கனத்தையும் மென்மையையும் நிறத்தையும் நிர்ணயித்து அதற்கேற்பத் தயாரித்து ஏற்றுமதி செய்ய வேண்டும். இங்கே நமது ராசியும் நல்லியும் இந்த ஸீஸனுக்கு இந்தப் புடவை ஃபாஷன் என்று கூறி அதற்கு ஒரு செல்லப் பெயரும் சூட்டி வியாபாரத்தைப் பெருக்க முனைவது போல்தான் மேல்நாட்டிலும் நடக்கிறது. இதிலே அவர்கள் கையாள்கிற சில வியாபார தந்தி

சத்தூட்டம்
நிறைந்தது
குதூகலம்
மிகுந்தது!

புதியது!

# ஐஸ்-க்ரீம் சுவை
# காம்ப்ளான்®



அம்மாக்களே! இதோ சத்தூட்டம், சிறுவர்கள் அனுபவிக்கத் துடிக்கும் சுவையில்: நாவூறச் செய்யும் ஐஸ் க்ரீம். அவர்கள், வெப்பத்தினால் சரியாக உணவருந்தாத போது, அவர்களுக்கு அவசியமான போஷாக்கை அளிக்க 'ஜில்'லென்று குளிர்வித்த ஐஸ் க்ரீம் சுவைகாம்ப்ளான் கொடுங்கள்.

புரதங்கள், நேரடியாக உடல் வளர்ச்சிக்கு பலனளிக்கும் சத்துக்களாகும். காம்ப்ளான், மிகமேலான புரதச் சத்துக்களையும்—அதாவது, பால் புரதச் சத்துக்களையும் (20%) மற்றும் 22 இதர மூலாதார உணவுச் சத்துக்களையும் தருகிறது. இவை வளரும் சிறுவர்களுக்கு தினப்படி தேவைப்படுவதாகும். துவங்குங்கள் காம்ப்ளான் உங்கள் குழந்தைகளுக்கு— அன்றாடம் இருவேளை.

காம்ப்ளான் ருசிமிகுந்த சாக்லேட், ஸ்ட்ராபெர்ரி, ஏலக்காய்—குங்குமப்பூ சுவைகளிலும் மற்றும் சாதாரண ரகத்திலும்கூட கிடைக்கிறது.

பால் சேர்த்திடத்
தேவையில்லை.








## காம்ப்ளான்® -திட்டமிட்ட பரிபூரண உணவு

GLC.203.12 Tam



Blackbelt

# Blackbelt

## BRIEFS & BANIANS

For strong ones
who wish to remain in style and comfort.

BRIEFS



Sultan
BANIANS



BOXER
TRUNKS



FIANCEE
COMFORT BRIEFS




SAHEB
BANIANS



MARSHALL
BRIEFS



ARMS-AH-185-1

Quality Products of Aristocrat Hosiery Pvt. Ltd.
Post Box No. 3359, Bombay-400 003. Tel: 321861 • 330251

ரங்களும் உண்டு. உதாரணமாக ஓர் ஆண்டில் பிரபலப்படுத்தப்பட்ட ஒரு ஃபாஷன் மக்களைக் கவரவில்லை. வரவேற்புப் பெற வில்லை. இறக்குமதி செய்யப்பட்ட ஏராள மான தோல் தேங்கி விட்டது. அடுத்த ஆண்டு ஒரு புதிய ஃபாஷனை அறிவித்தார்கள். வேறொன்றுமில்லை, சென்ற ஆண்டு தருவிக் கப்பட்ட நிறங்களையே ஒட்டுப் போட்டு ஒரு ஹிப்பி ஃபாஷனை அறிமுகப்படுத்தினார் கள். அதற்கு ஓகோகோ என்று வரவேற்பு. வியாபாரம் சக்கைப்போடு போட்டது. ஆனால் தேங்கி நின்ற தோலையே பயன்படுத் தியதால் அந்த ஆண்டில் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி வெகுவாகக் குறைந்து போயிற்று. பலருக்கு இங்கே பலத்த அடி. எனவேதான் குறைந்த காலத்தில் லட்சக்கணக்கில் பணம் பார்த்து ஏற்றுமதி சாதனைக்கான பரிசுகளும் பாராட்டுக்களும் அரசிடம் பெற்றவர்கள் கூட அடுத்த ஓரிரு ஆண்டுகளில் அதே அள வில் கடன்பட்டும் போய் விடுகிறார்கள்! இதி லெல்லாம் விழுந்து எழுந்து சமாளிக்க வேண்டுமென்றால் நிதானமும், திட்டமிட லும், தீர்க்கதரிசனமும் வேண்டும். தனியார் துறையிலேயே இவற்றை இந்தத் தொழிலில் பரவலாகக் காண முடியாத போது அரசுத் துறையில் எப்படி எதிர்பார்க்க முடியும்? எனவேதான் இந்தத் தொழிலிலும் வர்த்தகத் திலும் இறங்கியுள்ள ஒவ்வொரு மாநில அரசுநிறுவனமும் (தமிழகம் உள்பட) நஷ்டப் பட்டுக் கொண்டே இருக்கிறது.. அனைத்துக் கும் சிகரம் வைத்தாற்போல மத்திய அரசின் டானரி அண்டு ஃபுட்வேர் கார்ப்பரேஷன் நாளொன்றுக்கு ஒரு லட்சம் ரூபாய் நஷ்ட மடைந்து மகத்தான சாதனை புரிந்து வருகிறது. அரோகரா ஆவதெல்லாம் நமது வரிப்பணம் தான் என்பதை அறிந்து கொள்க! ஏழையோ பணக்காரனோ இந்நாட்டின் கோடானு கோடி மக்கள் கெரஸினோ, தீப்பெட்டியோ பீடி — சிகரெட்டோ எதை வாங்கினாலும் அவர்களை யறியாமல் வரி செலுத்திக் கொண்டிருக் கிறார்களே அந்தப் பணமெல்லாம்தான் இப் படிப் பல விதங்களில் விரயமாகிக் கொண் டிருக்கிறது.'

## செயற்கைத் தோல்; பாம்புத் தோல்; முதலைத் தோல்!

''செயற்கைத் தோல் இப்போது வந்து விட்டதே அதனாலும் வர்த்தகம் பாதிக்கப்பட லாம் இல்லையா?''

''இல்லவே இல்லை! செயற்கைத் தோல் வந்திருப்பதால் அசல் தோலின் விலை ஓரளவு ஸ்திரப்பட்டிருக்கிறது. இல்லையென்றால் கட்டிப்பிடிக்க முடியாத அளவில் விலை உயர்ந் திருக்கும். வேறு ஒன்றும் வேண்டாம், இந்தியக் குடிமகன் ஒவ்வொருவனும் நாளை முதல் செருப்பு அணிவது என்றும் இடையில் ஒரு பெல்ட் அணிவது என்றும் ஒரு மணி பர்ஸ் வைத்துக் கொள்வது என்றும் தீர்மா னிக்கட்டும்; ஏற்றுமதி செய்ய நம் நாட்டில் தோலே இருக்காது!''

''அப்படியானால் இந்தியக் குடிமகனின் ஏழைமை நிலையும் தோல் ஏற்றுமதி வர்த்தகத் துக்கு உதவுகிறது என்று சொல்லுங்கள்!''

''சந்தேகமில்லாமல்!''

''அது சரி, கஸ்டம்ஸ் இலாக்காவினர், கடத்திச் செல்லப்படவிருந்த முதலைத் தோலைக் கைப்பற்றினார்கள்; பாம்புத் தோலைப் பறிமுதல் செய்தார்கள் என்று அவ்வப்போது நாளிதழ்களில் செய்தி வரு கிறதே?''

''பாம்புத் தோல் பெல்ட்டும் முதலைத் தோல்கைப்பையும்பர்ஸும்ரொம்பரொம்ப மேல்நாடுகளில் ஃபாஷன். அதனால் அவற் றுக்கு அங்கே கிராக்கி அதிகம். இங்கேயோ நமது அரசு பாம்புகளைக் கொன்றால் எலிகள் பயிரை அழித்துவிடும் என்பதால் பாம்பு பிடிக்கத் தடை விதித்துள்ளது. அதேபோல் முதலை இனமே அழிந்துவிடும் ஆபத்து உள்ளதால் அதற்கும் தடை. ஒரு பொரு ளுக்குத் தடையிருந்தால் கிராக்கி அதிகமா கிறது. கொஞ்சம் ரிஸ்க் எடுத்தால் ஏராள மான பணம் சம்பாதிக்கலாம் என்னும் போது வரி ஏய்ப்பும் கள்ளக்கடத்தலும் நடக் கிறது.''

தோல் பதனிடும் தொழில், வர்த்தகம் பற்றி இத்தனை விவரங்களைத் தெரிந்து கொண்ட பிறகு பல்லாவரம் வரை சென்று ஒரு தொழிலகத்தை நேரில் பார்க்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது.

''வாருங்கள்'' என்று நண்பர் அழைத்துப் போனார்.

(மீதி அடுத்த இதழில்.......)

— கி. ராஜேந்திரன்.

மேலட்டை வண்ணப்படம்: யோகா.

---

ஒருவர்: ''அந்த ரிசப்ஷனிஸ்ட் ரொம்ப நல்ல மாதிரியா இருக்காங்க. எங்கிட்டே ரொம்ப அன்பாகவும் அக்கறை யாகவும் பேசினாங்க.''

மற்றவர்: ''நீங்க பரவாயில்லே, அதிர்ஷ்டசாலி. என்கிட்டே ஒரு நாளும் அந்தம்மா அப்படி நடந்து கொண்ட தில்லே.''

முதல்வர்: ''ஏன் அப்படி?''

மற்றவர்: ''நான் அவளைக் கட்டிக் கொண்டவன்.''

— அ. சுந்தரம்.



'கல்லூரிக்குப் பக்கத்தில் சிறைச்சாலை அமைந்தால் என்ன குடிமுழுகிப் போய் விடும்? மாணவர்கள் இதனால் ஒன்றும் கெட்டுப் போய்விட மாட்டார்கள்' என்று தமிழக அரசு எண்ணியது போலும்! 'கல்லூரியே ஒரு சிறைச்சாலைதான்' என்று கூடச் சில மாணவர்கள் கருதுவது அரசுக்குத் தெரியாதா என்ன? கல்லூரியில் தகராறு நடந்தால் சம்பந்தப்பட்டவர்களை வளைத்துச் சிறைச்சாலையில் தள்ள வசதியாக இருக்கும் என்றும் சிறைச்சாலையில் இருக்கும் சில கைதிகள் உயர் கல்வியைத் தொடர விரும்பினால் அதற்கும் சௌகரியமாய் இருக்கும் என்றும் கூடத் தமிழக அரசு சிந்தித்திருக்கலாம். இரண்டுமே இந்தக் காலத்தில் நடக்கக் கூடியவைதாமே! எனவே முன்யோசனையுடன் செயல்படுவதாக அரசு பெருமையுடன் எண்ணியிருந்தால் வியப்பில்லை.

ஆனால் சிக்கல் என்னவென்றால், திறந்த வெளிச் சிறைச்சாலை அமைய இருக்கும் அந்த இடத்தைக் கல்லூரிக்கே ஒதுக்குவதாகத் தொடக்கத்தில் வாக்களிக்கப்பட்டதுதான்! எனவே, "கல்லூரிக்குப் பக்கத்தில் சிறைச்சாலையா?" என்பதைக் காட்டிலும், "கல்லூரியா? சிறைச்சாலையா?" என்றே கேள்வி எழுப்பலாம்! இந்தச் சிக்கலை மேலும் ஆராயத் தஞ்சைக்குச் சென்றோம்.

தஞ்சாவூர்—திருச்சி சாலையில் 18 வது கி.மீ.யில் உள்ளது ஷண்முகா இன்ஜினியரிங் கல்லூரி மற்றும் ஷண்முகா பாலிடெக்னிக். 640 மாணவ, மாணவிகள் படிக்கும் கல்வி நிறுவனங்கள் இவை. தற்போது 90 ஏக்கரில் அமைந்துள்ள இந்தக்கல்லூரிகளுக்குப்பக்கத்தில் உள்ள சுமார் 75 ஏக்கர் நிலத்தில் திறந்த வெளிச் சிறைச்சாலை வரப் போகிறது என்பதுதான் சிக்கல்.

பிரச்னையின் உள்விவகாரம் என்ன?

1984 ல் ஏகப்பட்ட சுயநிதி கல்வி நிறுவனங்களுக்குத் தமிழக அரசு அனுமதி கொடுத்தது. அதில் ஒன்றுதான் ஷண்முகா பாலிடெக்னிக்கும் இன்ஜினியரிங் கல்லூரியும். எடுத்த எடுப்பிலேயே இந்தக் கல்லூரிக்குச் சோதனை ஏற்பட்டது. அங்கீகாரம் அளிக்கத் தாமதமானதுதான் அந்தச் சோதனை. விளைவு, நீதிமன்றம் சென்றனர் நிர்வாகிகள். நீதிமன்றம் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தைக் கண்டித்ததோடு உடனடியாக அங்கீகாரம் கொடுக்க வேண்டும் என்று உத்தரவும் போட்டது.

இன்ஜினியரிங் கல்லூரி ஆரம்பிக்க வேண்டுமென்றால் 150 ஏக்கர் நிலம் இருக்க வேண்டும் என்பது நிபந்தனை. ஆனால் இந்த நிபந்தனையை இரண்டு வருடத்திற்குள் பூர்த்தி செய்தால் போதும். முதலில் 75 ஏக்கரை வளைத்துப் போட்டது நிர்வாகம். பக்கத்தில் உள்ள புறம்போக்கு நிலமான 75 ஏக்கரையும் அரசிடமிருந்து பணம் கொடுத்து வாங்கிக் கொள்ளலாம் என்ற எண்ணத்தில் கல்லூரியைத் திறந்தது. ஆனால் இப்போது சிக்கல் அந்த 75 ஏக்கரில்தான்! அங்குதான் திறந்தவெளிச் சிறைச்சாலை வரப் போகிறதாம்!

திறந்தவெளிச் சிறைச்சாலை வந்தால் சூழ்நிலைகள் பாதிக்கப்படுவது ஒருபக்கமிருக்க, கல்லூரியின் வளர்ச்சியும் பாதிக்கப்படும். விரிவுபடுத்த வழி இருக்காது. இப்போது 640 மாணவ, மாணவிகள் படிக்கும் இந்தக் கல்வி நிறுவனங்களில் இன்னும் சில ஆண்டுகளில் ஆயிரக்கணக்கான மாணவர்கள் படிப்பார்கள். அப்போது விரிவாக்க முயற்சிகளுக்குப் பெரிய இடையூறு ஏற்படும்.

திறந்தவெளிச் சிறைச்சாலை கல்லூரிக்குப் பக்கத்தில் உள்ள நிலத்தில்தான் வரவேண்டும் என்பதில்லையே? அதிகாரிகள் ஏன் இவ்வளவு குறியாக இருக்கிறார்கள் என்று விசாரித்தபோது சில ருசிகரமான தகவல்கள் கிடைத்தன:

SHANMUGHA COLLEGE OF ENGINEERING
THANJAVUR - 613403, TEL.VALLAM 51.42.
ஷண்முகா பொறியியல் கல்லூரி

* வளர்ந்து வரும் கல்லூரி.



# கல்லூரிக்குப் பக்கத்தில் சிறைச்சாலையா?

இந்தத் திறந்தவெளிச் சிறைச்சாலை
முதலில் தமிழ்ப் பல்கலைக் கழகத்துக்குப்
பக்கத்தில் அமைக்கப்பட இருந்ததாம். ஆனால்
பிறகு பல்கலைக்கழகத்திற்குப் பக்கத்தில்
சிறைச்சாலை இருக்க வேண்டாம் என்று
கருதி அந்த யோசனையைக்கைவிட்டிருக்கிறார்
கள். தமிழ்ப் பல்கலைக்கழகத்துக்குப் பக்கத்
தில் சிறைச்சாலை கூடாதென்றால், ஷண்முகா
இன்ஜினியரிங் கல்லூரிக்குப் பக்கத்தில்
மட்டும் வைத்துக் கொள்ளலாமா?

இதில் இன்னொரு வேடிக்கை என்னவென்
றால், மாவட்டத்தில் உள்ள அதிகாரிகள்
திறந்தவெளிச் சிறைச்சாலைக்கு இந்த இடம்
தான் இருக்கிறது என்று சொல்லியும்கூட
சிறைத்துறை இன்ஸ்பெக்டர் ஜெனரல் அந்த
இடம் சரியான இடம் அல்ல என்று சொல்லி
விட்டாராம். ஆறு மாதங்களுக்கு முன்பே
அவர் அப்படித் தெரியப்படுத்தியும்கூட ஒரு
மாதத்துக்கு முன்பு "திறந்தவெளிச் சிறைச்
சாலை" என்ற போர்டை அங்கு நட்டு இருக்
கின்றனர்! இதனால் நிர்வாகிகளும் மாண
வர்களும் ஆசிரியர்களும் பதற்றம் அடைந்
துள்ளனர்.

- பதற்றம் ஏற்படுத்தும் 'போர்டு'

திறந்த வெளிச்சிறை
திருமலை-சமுத்திரம்.



நிர்வாகிகளை அணுகிக் கேட்டபோது,
"அரசு அதிகாரிகள் மிகவும் அனுதாபத்
துடன் எங்கள் கோரிக்கையைக் கவனிப்
பார்கள் என்று எதிர்பார்க்கிறோம்" என்றார்
கள். அதற்கு மேல் பேச அவர்கள் தயங்கு
வதில் வியப்பில்லை.

ஷண்முகா இன்ஜினியரிங் கல்லூரியைச்
சுற்றிப் பார்த்தபோது, நல்ல முறையில் கல்
லூரி வளர்ந்து வருவது புரிந்தது. பல சுயநிதி
கல்வி நிறுவனங்கள் ஆரம்பித்து இரண்
டாண்டுகளாகியும் கொட்டகைகளிலும்,
திறந்த வெளிகளிலும் இயங்கிக்கொண்டிருக்
கும்போது, இந்தக் கல்லூரி வளாகத்தில்
நல்ல கட்டிடங்கள் எழும்பி இருக்கின்றன.
சோதனைச்சாலைக்கு வேண்டிய நவீனக் கருவி
கள் வாங்கப்பட்டுள்ளன. கல்லூரி நல்ல
முறையில் வளர்வதற்கான சாத்தியக் கூறு
கள் தெரிந்தன. தஞ்சாவூர் மாவட்டத்தில்
உள்ள ஒரே இன்ஜினியரிங் கல்லூரி இது
தான்.

அமைச்சர்கள் மட்டத்தில் கல்லூரி நிர்
வாகிகளின் கோரிக்கைக்கு ஆதரவு இருப்ப
தாகவே தோன்றுகிறது. நிச்சயமாக முதல்வ
ரின் ஆசி கல்லூரிக்குக் கிடைத்திருக்கிறது.
ஆக எந்த இடத்தில் கோளாறு என்று புரிய
வில்லை. ஒருவேளை கல்லூரி நிர்வாகிகள்
கோரிக்கைகளை வெளிப்படுத்தியபோது
'செய்து விடலாம்' என்று வாக்களித்த
அமைச்சர், அப்படி உறுதி அளிப்பதற்கு
முன்பாக, சம்பந்தப்பட்ட அதிகாரிகளைக்
கலந்தாலோசிக்காமல் விட்டதுதான் தவறோ
என்னமோ? அந்நிலத்தைக் கல்லூரிக்கு
வழங்க முடியுமா? அதில் இடையூறு உண்டா?
என்று கேட்டிருந்தால், அப்போதே திறந்த
வெளிச் சிறைச்சாலை பற்றியும் முடிவெடுத்
திருக்கலாம். சிறைத்துறைத் தலைவர் அந்த
நிலம் வேண்டாம் என்று கூறியும், மாவட்ட
அதிகாரிகள் கல்லூரிக்குப் பக்கத்தில் உள்ள
இந்த இடத்தைத்தான் சிறைச்சாலைக்குத் தர
முடியும் என்று வற்புறுத்தி வருவது ஏன்
என்பது பெரிய மர்மமாய் உள்ளது. கல்லூரி
யின் எதிர்கால முன்னேற்றங்களைக் கருத்தில்
கொண்டு அரசு, திறந்தவெளிச் சிறைச்
சாலையை அந்த இடத்தில் திறக்காமல் வேறு
இடத்தை ஏற்பாடு செய்து தருமா?- அந்த
நிலத்தைக் கல்லூரிக்கே வழங்குமா?

— நமது நிருபர்.

படங்கள்: மனோ.



## காகித ஓடம்

இராம நாராயணன் மறுபடியும் திகைக்க வைக்கிறார். ஒரு 'காதல்' போராட்டத்தை அழகாய், அலுப்பில்லாமல் கொடுத்திருக்கிறார்.

நளினிக்கு வாய்ப்பான ரோல். காதலிப்பது ஒருவனை. காதலிக்கப்படுவது இன்னொருவனால். வில்லன் (கள்) அநியாயமாய்க் கற்பழித்து விட, காதலன் வஞ்சகமாய்க் கொல்லப்படுகிறான். சோதனை. வேதனை.

ஸ்கூல் டீச்சராய் வந்த இடத்தில் இன்ஸ்பெக்டராய் இவளைக் காதலித்தவன், 'நான் வாழ்வு தருகிறேன், வா.' என்கிறார். குழப்பம், விரக்தி.

சரி, அவனையே சேரலாம் என்று அவள் முடிவெடுக்கும் நேரம், பழைய வில்லன்கள் மறுபடியும் குறுக்கிட்டுப் பிரச்னைகளைக் கிளப்ப...

கடைசியில் நல்லவை, தீயவைகளை வெற்றி கொள்ள, வணக்கம்.

புதுமுகம் பிரசாத் ஏராள கிராப் போடு இன்ஸ்பெக்டர். சோகம் முகத்திலேயே இருக்கிறது. மற்ற பாவங்களை வரும் படங்கள் சொல்லட்டும்.

நளினி அலட்டிக் கொள்ளாமல், கொடுத்த பாத்திரத்தைச் செய்வதில் சமர்த்தராகி விட்டார்.

உசிலைமணி, லூஸ் மோகன், பிந்து கோஷ், எஸ். எஸ். சந்திரன் — எப்பொழுதாவது நாம் புன்னகை பூக்கக் காரணமாகிறார்கள்.

'பொன் வீணையே என்னோடு வா' பாடல் நாலு ரீலுக்கொரு தரம் ரிபீட் ஆனாலும், இனிமையான பாடல். சங்கர் கணேஷுக்குப் பாராட்டுக்கள்.

பிராட்கேஜில் ஒரு கம்பார்ட்மெண்ட், மீட்டர் கேஜில் ஒரு கம்பார்ட்மெண்ட் இழு என்று சொன்னால் இன்ஜின் என்ன செய்யும் பாவம்? போதாததற்குத் தண்டவாளத்தை விட்டு அவ்வப்போது தரையிலும் ஓட வேண்டும்!

கத்தி, ரத்தம், கொலை என்று த்ரில் டைப்பில் ஆரம்பித்து, பழைய மனைவி, புதிய காதலி என்ற முக்கோண உறவை அலசி, 'அடடா, மறந்து போச்சே' என்று மறுபடியும் கொலை எட்செட்ராவை நுழைத்து, திருகு திருகு என்று திருகியிருக்கிறார்கள், கதையை. நடுநடுவே கவுண்டமணியின் டிராக்.

கொலைகாரன் தானே தன்னைப் போலீஸுக்கு அடையாளம் காட்டுவது' புதுமைதானே என்று சந்தோஷப்படுமுன், கடைசிக் காட்சிகளின் அபத்தம் மகிழ்ச்சியைக் குற்றுயிராக்கி விடுகிறது. ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் பைத்தியம் பிடித்த மாதிரி குற்றவாளியை எந்தவித நெருக்கடியும் இல்லாமல் சுட்டுத் தள்ளுவது அநியாயம்.

ராஜராஜனின் அற்புத காமிராவுக்கு மட்டும் திருஷ்டி சுற்றிப் போட வேண்டும்.

## டிசம்பர் பூக்கள்





# மிஸ்டர் பாரத்

தாயை ஏமாற்றி, தன்னை அவள் வயிற்றில் கொடுத்து விட்டுக் கைகழுவி விட்டவனைப் பழி வாங்க, மகன் புறப்படும் அதே கதை.

ஆனால் விசுவின் வசனங்கள், டிஷ்யூம், டிஷ்யூம்களை விடப் புத்திசாலித்தனமான போராட்டம், சில உடைபடும் ஜார்கள் இவை கொஞ்சம் வித்தியாசமானவை.

ரஜினிகாந்திற்காகத் தைத்த சட்டை. ஆனால் அம்பிகாவிற்கு இப்படியும் இல்லாத, அப்படியும் இல்லாத சப்சப் ரோல்.

சத்யராஜிற்கு வித்தியாசமான சான்ஸ். ரஜினிகாந்தின் அப்பாவாக மிடுக்கும், துஷ்டத் தனமும், கோணலாகவே வேலை செய்யப் பழக்கப்பட்ட மூளையுமாய்ப் பிரகாசமான வாய்ப்பு.

பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடி சத்யராஜ் குமரேச கவுண்டர் வீட்டுக்குப் போக, அசல் கவுண்டர் (விசு) மறைந்து கொண்டு, ரஜினி காந்த் கவுண்டராய் வந்து எல்லாம் பேசி முடித்துவிட, மறுபடியும் அதே வீட்டிற்குள் சத்யராஜ் நுழையும் நேரம் விசு எதிர்ப்பட்டு அவரோடு உரையாட ஆரம்பிக்க, வெகு கலகலப்பான ஸீன். சத்யராஜ் தலையைப் பிய்த்துக் கொள்ளும் போது அதிர்ந்து சிரிக்க முடிகிறது.

பிஸினஸ் புலியை எதிர்த்துப் போட்டியிடுவ தெல்லாம் சரி: ஐந்து லட்சம் பெறுமான இடத்தை முன்பின் அறிமுகமில்லாத ரஜினிகாந்த்திற்கு சத்யராஜ் தூக்கி வழங்குவது அபத்தமாய் இல்லே? (குறைந்த பட்சம் ரஜினி ஒரு எம். எல். ஏ.விடமிருந்து லெட்டராவது வாங்கி வந்திருக்கலாம்.)

விசு வரும் காட்சிகள், குறைவு ஆனால் நிறைவு.

எஸ். வி. சேகர் அண்டு விஜி, தண்ணீரில் தெளித்த எண்ணெய்.

இளையராஜாவின் பாடல்களில் 'என்னம்மா கண்ணு சௌக்கியமா', எஸ். பி. முத்துராமனின் கைகளில் புது மெருகேறி ரசிக்கும்படி, வித்தியாசமாய்ப் படமாக்கப்பட் டுள்ளது.

ரஜினியின் காதோடு ஒரு விஷயம்: 'என்ன ரஜினி, இந்தப் படத்திலே மேக்கப்பைப் பத்தி கவலையே படலியா நீங்க? அப்புறம், ரோஷமாச் சண்டை போடறதெல்லாம் மறந்திட்டீங்களா என்ன?'

— ஜெயமன்மதன்



காலிஸ்தான் ஆதரவாளர்

பாம்பு மகுடிக்கு அடங்கிவிடும்

பர்னாலா

கடைசியிலே குழந்தையை என் தலையிலே கட்டிட்டுப் போய்ட்டாரே!

மாத்யூ கமிஷன்

பஞ்சாப், ஹரியானா பூசல்

கமான் புரட்சித்தலைவர்.

கமான் மக்கள் திலகம்

கமான்.. பொன்மனச் செம்மல்

கமான் மூப்பனார்

Zuma.

குதிரைப் பந்தயத்தைத் தமிழக அரசே ஏற்று நடத்தும் — செய்தி




கல்கி

1986 பிப்ரவரி 9
மலர் 44 இதழ் 28
குரோதன தை 27




# வயிற்றிலடிக்கும் விலை உயர்வு!

இந்த நாட்டின் குடிமகனாகப் பிறக்கும் துரதிர்ஷ்டம் பண்ணின கோடானு கோடி ஏழை எளியவரின் வயிற்றிலடிக்கும் விலை உயர்வு, லட்சோப லட்சம் நடுத்தர வர்க்கத்தினரின் வயிறு பற்றி எரியச் செய்யும் விலை உயர்வு அறிவிக்கப்பட்டிருக்கிறது.

பெட்ரோல், டீசல், கெரசின், சமையல் வாயு ஆகிய அனைத்துக்கும் ஒட்டு மொத்தமாய் ஒரே வீச்சில் விலை ஏற்றம் அறிவித்துள்ளது அரசு. அற்ப சொற்பமாக அல்ல; பயங்கர அளவில்!

அரிசியும் கோதுமையும் விலை ஏறி சில தினங்கள்கூட ஆகவில்லை. சென்னையில் ரூ 2.15க்குக் கிடைத்து வந்த ரேஷன் அரிசி ஜனவரி முதல் வாரத்தில் ரூ 2.50 ஆயிற்று. பிப்ரவரி தொடக்கத்தில் மேலும் விலை உயரும் என்று நேற்றுதான் ஓர் இடி விழுந்தது நம் தலையில். இன்று இந்தப் பேரிடியும் தாக்கியுள்ளது!

பெட்ரோலியம் பொருள்களின் விலை உயர்வுக்குக் கூறப்படும் காரணமும் 'காதிலே பூ சுற்றும்' முயற்சியே. சர்வதேச மார்க்கெட்டில் பெட்ரோலியம் விலை சரிந்துள்ளது. அவ்வாறிருக்க இங்கு விலை ஏறுவானேன் என்றால் கூடிய சீக்கிரம் சர்வதேச விலை கூடும் என்று எதிர்பார்க்கிறார்களாம்; அந்த எதிர்பார்ப்பின் அடிப்படையில் விலை ஏற்றுகிறார்களாம்! இது என்ன அயோக்கியத்தனம்! கூடிய விரைவில் நிதி அமைச்சர் வரிகளைக் குறைப்பார் என்று எதிர்பார்த்து இன்று குடிமகன் வரி செலுத்தாமலிருந்தால் அரசு ஒப்புக் கொள்ளுமா?

இந்த லட்சணத்தில் ஓ.என்.ஜி.ஸி. என்ற அமைப்பு இந்தியாவில் தோண்டாத இடம் பாக்கியில்லை என்று கூறுமளவுக்குப் பெட்ரோலியத்துக்காக நீரிலும், நிலத்திலும் குடைந்து கொண்டிருக்கிறது! கணிசமான அளவில் நம் நாட்டிலேயே பெட்ரோலியமும், இயற்கை வாயுவும் உற்பத்தியாகின்றன. இவ்வாறிருந்தும் விலையை உயர்த்துவது மக்களைக் கொடுமைப்படுத்தும் அசுரத் தன்மையையே உணர்த்துகிறது.

பெட்ரோலியம் பொருள்களின் விலை ஏற்றப்படுவதற்குக் கூறப்படும் இன்னொரு காரணம் அபத்தத்திலும் அபத்தமானது. இந்தியாவில் பெட்ரோலியம் பொருள்களை — குறிப்பாக பெட்ரோலை — உபயோகிப்பது நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறதாம். வற்றி வரும் இயற்கை எரிபொருளைச் சிக்கனமாகத்தான் செலவழிக்க வேண்டுமாம். அதற்காகத்தான் விலையை உயர்த்துகிறார்களாம்! பெட்ரோல்—டீசல் அதிகம் செலவாகிறதென்றால் காரணம் என்ன? இந்த அரசுதானே புதிய புதிய பெயர்களில் கார்களையும், ஸ்கூட்டர்களையும், மொபெட்டுகளையும் மோட்டார் சைக்கிள்களையும், லாரிகளையும், வேன்களையும் தயாரித்து விற்பனை செய்ய பல்வேறு நிறுவனங்களுக்கு அனுமதி வழங்கியது? அப்படி ஓர் உற்பத்திக் கொள்கையை வகுத்த பின்னர், 'ஐயய்யோ பெட்ரோல் செலவாகிறதே' என்று புலம்புவதில் பொருளென்ன? காரையும், லாரியையும், ஸ்கூட்டரையும், மொபெட்களையும் வாங்குகிறவர்கள் அவற்றை உபயோகிக்காமல் 'ஷோ கேஸில்' வைத்து அழகு பார்த்துக் கொண்டா இருப்பார்கள்?

பெட்ரோலியம் பொருள்களின் விலை ஏற்றம் என்பது, மற்ற எல்லாப் பொருள்களின் விலைகளும் ஏற வழிவகுக்கும் ஒரு விஷ வட்டம். டீசல் விலை உயர்வால் பண்டங்களை லாரிகளில் அனுப்பச் சுமை கூலி அதிகரிக்க, அப்பண்டங்களின் விலைகளும் உயரும். கார் வைத்திருப்போரில் 95 சதவீதத்தினர் அதற்காகும் செலவைக் கம்பெனி கணக்கில்தான் எழுதுகிறார்கள். அந்த நிறுவனங்கள் தயாரிக்கும் பொருள்களின் விலைகள் ஏறும். மத்திய, மாநில அரசு இலாக்காக்கள் வாங்கியுள்ள கார்கள், ஜீப்களின் எண்ணிக்கைக்கோ, அவை ஓடும் தூரத்துக்கோ ஒரு கணக்கு வழக்கா, உச்சவரம்பா ஏதும் இல்லை. எனவே இந்த அநியாய விலை உயர்வால் அரசு இலாக்காக்களில் ஏற்படப் போகும் அபரிமிதமான அதிகப்படி செலவுகளையெல்லாம் உயரப் போகின்ற வரிகள் மூலமாகச் சராசரிக் குடிமகன்தான் தாங்கப் போகிறான்!

தவணைமுறையில் ஸ்கூட்டரோ, மொப்பெட்டோ ஆசையோடு வாங்கிவிட்டு, அதற்கு பெட்ரோல் போட வழியின்றித் தவிக்கப் போகிறவர்கள் நடுத்தர வர்க்கத்தினரே. கெரஸின் விலை உயர்வால் ஏழை பாழைகளின் குடிசையில் விளக்கு, அடுப்பு எரிகிறதோ இல்லையோ, நிச்சயம் வயிறு எரியும். சமையல் காஸ் விலை உயர்வால் நடுத்தரவர்க்க இல்லத்தரசிகள் தாங்கள் அரசிகள் அல்ல; கருணையற்ற அரசின் அடிமைகளே என்று உணர்வார்கள்.

வாழ்க இ.காங்கிரஸ்! வளர்க ஜனநாயக சோஷலிஸம்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

* 26. 1.86 கல்கியில் தலையங்கம் கண்டேன். ஒரு காலத்தில் தொழில் வளர்ச்சியில் மூன்றாமிடத்தில் இருந்த நம் மாநிலம் எந்த அளவுக்கு இப்பொழுது தரம் தாழ்ந்து, சிரம் கவிழ்ந்த நிலையில் உள்ளது என்பதை அறியும்பொழுது என் நெஞ்சம் வேதனையால் பற்றியெரிகிறது. சாராயத்தில் வருவது சத்துணவுக்குச் சரிக்கட்டப்படும் 'புரட்சிகரமான' கொள்கை உடைய ஆட்சியில் தொழில் முன்னேற்றத்திற்கு ஏது இடம்? இந்த அழகில் இன்றைய (23.01.86) மாநிலச் செய்திகளில் 'தமிழகம் தொழில் வளர்ச்சியில் பின் தங்கியிருப்பதை' அமைச்சர் மறுத்துச்செய்தி அறிவிக்கப் பட்டது... அதைவிடச் சிறந்த 'ஜோக்' என்ன தெரியுமா? தமிழ்நாட்டில் ஒரு நாளைக்கு 12½ தொழிற்சாலைகள் திறக்கப்பட்டு வருவதாகவும் அமைச்சர் கூறியுள்ளார். மற்றொரு 'புரட்சி அறிவிப்பு!: வரும் ஜனவரி முதல் மதுவிலக்கு ஓரளவு அமுலாக்கப்படும் என்பதே! குழியையும் வெட்டிவிட்டு குழந்தையை விளையாடாதே என்று கூறி, பின்னர் 'அரை குழியை மூடுகிறேன்! பார்த்து விளையாடு' என்ற மாதிரியல்லவா இருக்கிறது நம் அரசு அறிவிப்பு!

திருவையாறு—4. குடந்தை முரளி.

### வாழ்க 'புரட்சி' திட்டங்கள்!

* எல்காட்டின் சாதனைப் பட்டியலைப் படித்துத் தலை நிமிர்ந்தேன். அந்தச் சாதனைகளை தலையங்கத்தில் விளக்கி இருந்தவிதம் கூர்மையாக இருந்தது. 'ஆஹா...! தமிழக அரசு நிறுவனங்கள் எத்தனை திறமையுடன் திட்டங்கள்தீட்டிச்செயல்படுகின்றன என்றுஎண்ணிப் பெருமிதம் கொள்ளும் வேளையிலே குறள் ஒன்று நினைவுக்கு வருகிறது: "முறைபட சூழ்ந்தும் முடிவிலவே செய்வர் திறப்பாடு இல்லாதவர்." வாழ்க 'புரட்சி' திட்டங்கள். வளர்க 'புரட்சி' சாதனைகள்!

சென்னை—18. இங்கியார்.

### உண்மை, அறிந்தேன்!

* ராணுவத்தில் பெரும்பங்கு இடம் பிடித்திருக்கும் சீக்கியர்களின் இன்றைய நிலை என்ன என்பதை ஜெனரல் கிருஷ்ணசுவாமி சுந்தர்ஜி பேட்டியில் கூறியதைப் படித்த பின்புதான் என் நீண்ட நாளைய மனச் சலனங்கள் அடங்கின.

கோவை—16. கா. சு. வேலாயுதன்.

### ஆவலைத் தூண்டிவிட்டீர்களே!

* இருட்டை மட்டுமே பார்க்கும் சராசரி மனோபாவத்தில் இருந்து மாறுபட்டு, ஒளியையும் காணும் ஒப்பற்ற 'வீரர் சுந்தர்ஜியின் தலைமையில் இந்திய ராணுவம் மேலும் பல பெருமைகளை அடையும் என்று நம்புகிறேன். Climax ல் "தொடரும்" போட்டு எங்கள் ஆவலைத் தூண்டிவிட்டு விட்டீர்களே!

இளங்கார்குடி. கோ. பாஸ்கர்.

### 'எவ்வளவோ தேவலாம்!'

* சும்மா சொல்லக் கூடாது சார்! மணிக்கணக்கில் பேசிப் போரடிப்பவர்களைக் காட்டிலும், நீங்கள் வெளியிட்ட ஆக்ஷன் 'கடி' ஜோக்கேஎவ்வளவோதேவலாம் போலிருக்கிறது!

திருச்சி—20. ஆர். அப்துல் சலாம்.

### கறுகறுப்பைக் காணோமே!

* நீர் போட்டிருக்கும் 'காலேஜ் கடி''யெல்லாம் பழசாய்ப் போய் ரொம்ப நாளாச்சு சாமி! கறுகறுப்பாய்... ஏதாவது...

சென்னை—44. பி. எஸ். கோவிந்தராஜன்.

### தராசின் தனித்தன்மை!

* விடை கேட்டெழுதும் வினாவிற்கு விந்தையாகவும், வியப்பாகவும், விடாப்பிடியாகவும், விரக்தியாகவும், வினாவின் வினையாளர்களை விகடகவியாக்கியும் விடை தரும் தனித்தன்மை தங்கள் தராசுக்குத்தானய்யா தரும்!

மல்லசமுத்திரம். ஆர். மணிவண்ணன்.

### பாரதி தீர்க்கதரிசிதான்!

* பரந்து விரிந்த இந்தப் பாரதப் பூமியில், பிற்காலத்தில், தனது சிலை வைக்கச் சிறிதளவு இடம் கிடைப்பது கூடத் தகராறாக இருக்கும் என்பதை உணர்ந்துதான் அன்றே தனக்குச் சொந்தமாகக் 'காணி நிலம் வேண்டும்' என்றுதீர்க்கதரிசனத்துடன் பாடினானோ அமரகவி பாரதி?

அரகண்டநல்லூர். கே. பிரதாப்சிங்.

### ஜெயமன்மதனின் வர்ணனை!

* ஹைதராபாத் படவிழாவின் ஆரம்ப கால விழாக் கோலத்தைத் தமக்கே உரிய குறும்புத்தனத்தோடு ஜெயமன்மதன் சொல்லியிருந்த விதம் ஜோர்.

நெல்லிக்குப்பம். எஸ். ஜே. சலீம் தமீஜுதீன்.

### கடைசிப் பக்கத்தில் கவிதைநயம்!

* கடைசிப் பக்க கலர்ப் படத்தைக் கவிதை நயத்தோடு எடுத்த திலீப் பானர்ஜிக்கும் வெளியிட்ட உங்களுக்கும் நன்றியும் பாராட்டுக்களும்.

குடியாத்தம். ஸ்ரீமதி. அமுதா பிரகாசம்.

### You Too KALKI!

* இந்த வாரக் கல்கி இதழ் எனக்கு வேதனை அளித்தது. அமரர் கல்கி அவர்களின் பண்பட்ட எழுத்தைக் குறிப்பிட்டு, சில வாரங்களுக்கு முன்னர்தான் 'தராசு' பதில்களில் எழுதியிருந்தீர்கள். அந்த மையின் ஈரம் உலரும் முன் ராஜேஷ்குமாரின் புதிய தொடர்கதையில் 'முழு உடம்பாய், உரித்த வாழைப்பழத்தின் நிறத்தில்... போன்ற வர்ணனைகள்...! இது தேவைதானா? யோசனை பண்ணுங்கள்.

சென்னை—78. சுப்ர. பாலன்.

## "வேதனையால் நெஞ்சம் பற்றி எரிகிறது"



# "ஜவாஹர்லாலே என் வாரிசு; ராஜாஜி அல்ல!"

9

பத்து மாதச் சிறைவாசத்துக்குப் பிறகு ஸி. ஆர். விடுதலையாகியிருந்தார். அவருடைய சிந்தனைப் போக்கு எத்தகையதாக இருக்கும் என்று அறியும் ஆவலுடன் காந்தி அவருக்கு எழுதினார்: "என் பார்வை உள்பட அனைவருடைய கவனமும் உங்கள் பக்கம்தான் திரும்பியுள்ளது!" ஸி. ஆருக்குப் பல புதிய யோசனைகள் தோன்றிய போதிலும் காந்தியுடனோ, விடுதலை பெற்றிருந்த நேரு, படேல், ஆஸாத் ஆகியோருடனோ அவற்றைப் பற்றிப் பேசுவதற்கு முன், நிலைகுலைந்து போயிருந்த தமது சகோதரருக்கு ஆறுதல் கூறும் முதல் கடமை அவருக்கிருந்தது. விடுதலையாகி இரண்டு வாரங்களுக்குப் பிறகு அவர் சேவாக்கிராமத்துக்கு வந்து சேர்ந்த போது, மகாத்மாவுக்கும் அவருக்கும் இடையே கருத்து வேற்றுமைகள் இருப்பது தெளிவாயிற்று. பிரிட்டிஷ் அரசுக்கு மற்றும் ஒரு வாய்ப்பு தரப்பட வேண்டும் என்று கருதினார் ஸி. ஆர். மக்களிடையே எழுச்சியை உண்டாக்காத தனி நபர் சத்தியாக்கிரஹத்தைக் கைவிட வேண்டும் என்றும் அபிப்பிராயப்பட்டார். காந்தி இந்த இயக்கத்தின் தீவிரம் குறைந்து விட்டதென்பதை ஒப்புக் கொண்டாலும், வெகுஜனக் கிளர்ச்சியைத் தற்சமயம் தூண்டி விடுவது தர்மமல்ல என்று கருதியதால் தனி நபர் சத்தியாக்கிரகம் தொடரலாம் என்றே எண்ணினார். பிரிட்டிஷார் உருப்படியாக எதையும் இந்தியாவுக்கு அளிக்க முன்வருவார்கள் என்று அவர் நம்பவில்லை. எனவே, தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிலர் தொடர்ந்து சத்தியாக்கிரஹத்தில் ஈடுபட வேண்டும் என்றார். மேலும், அவருடைய அஹிம்சைக் கொள்கைக்கு நேர்மாறான உலக யுத்தத்தில் இந்தியா பங்கெடுத்துக் கொள்வது என்பது அவருக்கு ஏற்புடையதாக இல்லை. ஒரு மாதம் கழித்து இருவரும் மீண்டும் சந்தித்தபோது, பேச்சு வார்த்தைகள் ஐந்து நாட்களுக்கு நீடித்தன. அதில் பங்கேற்ற வல்லபாய் படேல் மகாத்மாவுக்கே முழு ஆதரவு தெரிவித்தார். நேரு தமது நாட்குறிப்பில் எழுதினார்: "ஸி. ஆர். ரொம்பத் தொந்தரவு கொடுக்கப் போகிறார் என்றே அஞ்சுகிறேன். எனினும் பாபு ஒரு பாறையைப் போல் அசைந்து கொடுக்காமல் இருப்பது மகிழ்ச்சி அளிக்கிறது."

ஆனால் ஸி. ஆர். மௌலானாவின் ஆதரவைத் தேடிப் பெற்றதுடன் காங்கிரஸ் கட்சியினரின் ஆதரவையும் நாடினார். லக்னோ பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் காந்தியுடன் தமக்கிருந்த கருத்து வேறுபாட்டைப் பகிரங்கமாக அறிவித்து உரையாற்றினார்:

"இருபத்திரண்டு வருடங்களாக காந்திஜியுடன் சேர்ந்து பணியாற்றி வந்திருக்கிறேன். அவருடைய கொள்கைகளையும், திட்டங்களையும் உருவாக்கிச் செயல்படுத்த அவருக்கு உதவி வந்திருப்பதில் நியாயமான பெருமை கொள்கிறேன். அவருடன் என்னை இணைக்கும் பிணைப்புக்கள் பலப்பல. எங்களுக்கிடையே வேறுபாடுகள் தோன்றியிருப்பதை உணர்வதோ அது காரணமாக நாங்கள் வெவ்வேறு பாதைகளில் பிரிந்து செல்ல நேரலாம் என்பதைப் புரிந்து கொள்வதோ மகிழ்ச்சி தரும் விஷயங்கள் அல்ல. ஆனால் அப்படி நடக்கத்தான் போகிறது என்றால், அடக்கத்துடனும், பிரார்த்தனையுடனும் அந்த நிலைமையைச் சந்திக்க நாம் தயாராகத்தான் வேண்டும்."

மீண்டும் ஒருமுறை ஸி. ஆர். விவாதத்தில் வெற்றி பெற்றார். ஜப்பானியர்கள் பெர்ல் ஹார்பரைத் தாக்கியதும் பசிபிக் மாகடலில் ஆதிக்கத்தை விஸ்தரித்ததும் ஸி. ஆருடைய வாதத்துக்குப் பலம் சேர்த்தன. ஜப்பான் இந்தியாவை ஆக்கிரமித்தால் வன்முறையின்றி இந்தியா தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முடியுமா? முடியாது என்பதைப் பெரும்பாலான காங்கிரஸ்காரர்கள் ஒப்புக் கொண்டனர்; ஸி. ஆருடன் ஒத்துப் போயினர். பிரிட்டன் இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்க முன்வந்தால், இந்தியா ஜப்பானுக்கும், ஜெர்மனிக்கும் எதிராக நேச நாடு

களுடன் (பிரிட்டன், ரஷ்யா, சீனு, தற்போது போரில் இறங்கிவிட்ட அமெரிக்கா) இணைய வேண்டும். பர்தோலியில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி, இந்தப் புதிய உலக நிலைமையை உத்தேசித்துத் தீர்மானம் நிறைவேற்றியது. இந்தியாவுக்குச் சுதந்திரம் அறிவிக்கப்பட்டால் நேச நாடுகளுடன் அது ஒத்துழைக்கும் என்றது.

காந்தி தாம் புறக்கணிக்கப்பட்டதாகக் கருதினர் எனில், அதை அவர் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. தம் சகாக்களின் மன நிலையை உணர்ந்து, தமது கருத்துக்களை வலியுறுத்தாமல்விட்டார். "அவர் என்னிடம் அற்புதமான முறையில் நல்லவிதமாக நடந்து கொண்டிருக்கிறார்" என்று ஸி. ஆர். தேவதாஸுக்கு எழுதினர். "ஆனல் யோசித்துப் பார்த்தால் அதில் என்ன அதிசயம் இருக்கிறது? அவர் எப்போதுமே என்னிடம் அப்படித்தான் நடந்து கொண்டு வந்திருக்கிறார். எதிர்பாராத திருப்பங்கள் ஏற்பட்டுள்ளன. அவற்றிலிருந்து உருப்படியாக ஏதும் விளையாமலே போகலாம். ஆயினும் என்ன? என் முயற்சி தோல்வி அடையும் வாய்ப்புக்களே அதிகம் என்பது தெரிந்திருந்தும் சரியான காரியத்தையே செய்திருக்கிறேன் என்ற திருப்தி எனக்கு உண்டு.

காங்கிரஸ் காரியக் கமிட்டியின் பர்தோலி தீர்மானத்தை அலசு வார்தாவில் அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டி கூடிய போது காந்தி தமக்கு ஆதரவு அளிக்க வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காகக் காங்கிரஸின் இதர தலைவர்களைக் கைவிட்டு விட வேண்டாம் என்று கமிட்டியினரைக் கேட்டுக் கொண்டார். 'எப்படியும் யுத்தத்தில் இந்தியா நேச நாடுகளுடன் ஒத்துழைப்பது என்பது ஒரு நிபந்தனையை உள்ளடக்கியிருப்பதால், அது இப்போதைக்குக் கருத்தளவில்தான் இருக்குமே தவிர செயல் வடிவம் பெறப் போவதில்லை.' காந்திஇவ்வாறுகூறியபிறகும் ஸி. ஆர். தம் கருத்துக்கு ஆதரவு பெற மிகுந்த பாடுபட வேண்டியிருந்தது. படேலும் பிரசாத்தும் அவருக்கு எதிர்ப்புத் தெரிவித்திருந்தனர். 'சட்ட மறுப்பு இயக்கத்தைக் கைவிடும் யோசனை வருந்தத் தக்கது' என்றார் ஜவாஹர்லால். 'ஸி. ஆர். செல்கிற மலர் தூவிய பாதை இன்பமளிப்பதாய் இருக்கலாம். ஆனல் லட்சியத்தை அடைய உதவாது' என்றார். வேறு சிலர், 'ஜப்பானின் விரோதத்தைச் சம்பாதித்துக் கொள்வது புத்திசாலித்தனமா?' என்று வினு எழுப்பினர். இன்னும் சிலர் ஸி. ஆர். மகாத்மாவுக்குத் துரோகம் செய்வதாகவே குற்றம் சாட்டினர்கள்.

மீண்டும் மீண்டும் எழுந்த பலத்த கர கோஷங்களுக்கு இடையே ஸி. ஆர். 75 நிமிஷம் உரையாற்றினர். எல்லா விவாதங்களுக்கும் பதில் கூறினர்: "அகிம்சைப் போராட்டம் என்ற தத்துவம், கௌரவமான முறையில் பிரச்னைக்குத் தீர்வு காணவும் நேசக் கரம் நீட்டவும் எக்கணமும் தயாராக இருப்பதைஉள்ளடக்கியஒன்று. திமீர்னாஜேய தயத்தால் பிரிட்டிஷ் அரசு காங்கிரஸின் கொள்கைகளில் உள்ள நியாயத்தை உணர்ந்துவிட்டால், பின்னர்நமதுபொறுப்பு மிக அதிகமாகிவிடும். அப்பொறுப்புக்களிலிருந்து நாம் தப்ப முடியாது. 'ஜப்பானின் விரோதத்தைச் சம்பாதித்துக் கொள்வதா' என்று கேட்கப்பட்டது. பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்ட இந்திய ராணுவத்தில் இருக்கும் இந்தியச் சிப்பாய்கள் ஏற்கெனவே ஜப்பானுக்கு எதிராகச் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள். 'இந்தியச் சிப்பாய்கள் வலுக்கட்டாயமாக இந்தியாவிலிருந்து அகற்றப்பட்டு போரில் ஈடுபடுத்தப்பட்டுள்ளார்கள்' என்று ஜப்பானிடம் நாம் கூறப் போகிறேமா? பிரிட்டிஷ் அரசு சரியான காரியத்தைச் செய்தால் அதன் யுத்த முயற்சிக்கு நம் ஒத்துழைப்பு உண்டு. மத்திய அரசை என் பொறுப்பில் விட்டால் நான் அதைஏற்றுக்கொள்வேன். ஆனல், சென்னை மாகாண அரசை மட்டும் என்னிடம் கொடுத்து, மத்திய அரசைக் கட்டுப்படுத்த எனக்கு உரிமை இல்லை என்று சொன்னல் நான் அதை ஏற்க மாட்டேன். ஒரு வேடன் என்று என்னை நீங்கள் கருதுவீர்களானல் பெரிய விலங்குகளை வீழ்த்துபவனுகவே எண்ணுங்கள்; அற்பசாதனைகள் எனக்குத்திருப்தி அளிக்காது!"

ஸி. ஆரின் இந்தப் பேச்சு சக்தி வாய்ந்ததாகவே இருந்தது. ஆயினும் பர்தோலி தீர்மானத்தை அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கீகரிக்கக் காரணமாக அமைந்தது காந்தியின் அறிவுரையே. மஹாத்மா விளக்கினர்: "பிரிட்டிஷ் அரசிடமிருந்து நாம் உருப்படியாகஎதையும்எதிர்பார்க்கமுடியாதுஎன்பது உண்மையாகவே இருக்கலாம். ஆனல் காங்கிரஸிடம் உலகம் என்ன எதிர்பார்க்கிறதோ அதற்கு இசைவாக இருக்கும் இந்தத் தீர்மானம். நடைமுறைக்கு ஒத்துவராத அஹிம்சைக் கொள்கையைக் காரணம் காட்டிக் காங்கிரஸ் பேச்சு வார்த்தைக்கே இடமில்லாமல் செய்துவிட்டது' என்று பிரிட்டிஷ் அரசு நம் மீது குற்றம் சாட்ட முடியாது."

வார்தாவில் காந்தி மேலும் இரு குறிப்பிடத்தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டார். காங்கிரஸின் வழிகாட்டி என்கிற பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டார். யுத்தத்தில் இறங்கத் தயாராக இருந்த ஓர் அமைப்பை வழிநடத்திச் செல்ல அவரால் முடியாது. ஆனல் பிரிட்டிஷ் அரசுக்கும் காங்கிரஸுக்கும் இடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட முடியாமல் போனல் அவர் மீண்டும் தலைமை ஏற்கத் திரும்பி வரும் வாய்ப்பிருந்தது. இதை காந்தி உள்பட அனைவரும் அறிந்திருந்தனர். இரண்டாவது நடவடிக்கையாக ஜவாஹர்லாலே தமது வாரிசு, ராஜாஜி அல்லஎன்று பகிரங்கமாகப் பிரகடனப்படுத்தினர்.

(தொடரும்)

தமிழாக்கம்: **சீதா ரவி.**

# A : ஃபார் ஆப்பிள்
# M : ஃபார் மர்டர்

## 5

டாக்டர் கமலவேணி நாற்காலியில் அமர்ந்தபடியே போலிப் பரிவோடும், அப்பாவித்தனமாகவும் முகத்தை வைத்துக் கொண்டு யாமினியைக் கேட்டாள்:

"என்னம்மா... உனக்கு என்னாச்சு...? ஏன் இப்படிச் சத்தம் போடறே... வா... இப்படி வந்து மேஜை மேல படு... ரிப்போர்ட் எழுத வேண்டாமா...?"

சேலையை இன்னமும் தன் உடம்பு பூராவும் நன்றாய்ச் சுற்றிக் கொண்ட யாமினி, மெல்லப் பின்வாங்கினாள். மூச்சிரைக்கக் கேட்டாள்:

"டாக்டர்... அதென்ன சத்தம்?"

"எது...?"

"இர்ர்ர்ர்ன்னு ஒரு சத்தம் கேட்டுச்சே அது...?"

"ஃபேன் ஓடின சத்தம்..."

"நோ... அது நின்ன பின்னாடி... அப்புறமா ஒரு சத்தம் கேட்டுச்சு... அது என்ன சத்தம்...? காமிராவா...? அந்தக் கார்ட்போர்டுக்குப் பின்னாடி யார் இருக்காங்க? பேச்சுக் குரல் கேட்டுச்சு... நீங்க யாருமே சரியில்லே... நான் போறேன்... இந்தக் கம்பெனியிலே எனக்கு வேலே வேண்டாம்..."

வேகவேகமாய்க் கதவை நோக்கி நடந்தாள் யாமினி. பின்னால் ஓடிவந்து அவளுடைய தோள்பட்டையைப் பற்ற முயன்ற டாக்டர்கமலவேணியைத்தள்ளிவிட—அவள் நிலை தடுமாறிக் கீழே விழுந்தாள்.

யாமினி கதவின் தாழ்ப்பாளை விலக்கி—படீரென்று திறந்தாள்.

கதவுக்கு வெளியே —

வாசலை அடைத்த மாதிரி சந்திரபோஸ் நின்றிருந்தான். உயிரில்லாத புன்னகையில் உதட்டை விரித்தான். "ஸாரி மிஸ் யாமினி... வெளியே மழை அதிகமாப் பெய்யுது... நீங்க இப்போ வெளியே போக முடியாதே..."

"பரவாயில்லே, நான் போயிடறேன்... இண்டர்வியூங்கிறபேரில அநியாயமாப்பண்ணீங்க...? ஹூ... ராட்டன் டர்ட்டி பிக்ஸ்...!"

"மெடிகல் டெஸ்ட் இன்னமும் பாக்கியிருக்கு... யாமினி... டாக்டர் ரிப்போர்ட் தரவேண்டாமா...?"

"எனக்கு வேண்டாம்... உடம்பை வெச்சு விபசாரம் பண்ற எவளையாவது அழைத்து வந்து உங்க கம்பெனியில் வேலையைக் குடுங்க..." என்று யாமினி ஆத்திரமாய்ப் பேசப் பேச —

சந்திரபோஸ் உள்ளே வந்து கதவைச் சாத்தினான். அதேநேரம் கரெண்ட் வந்து மின்விசிறி ஓட ஆரம்பித்தது; பழைய அந்தக் இர்ர்ர்ர்ர் சத்தத்தோடு. ட்யூப் லைட் உயிர் பிடித்து வெளிச்சம் போட்டது.

"டாக்டர்! அவளை மேஜைக்கு அழைத்துக் கொண்டு போங்க..."

"நோ..." யாமினி வீறிட்டாள்.

சந்திரபோஸ் சிரித்தான்.

"பிரயோஜனமில்லே யாமினி.... இனி மேல் நீ வீட்டுக்குப் போக முடியாது... நீ இந்தக் கம்பெனிக்குள்ளே அடியெடுத்து வெச்ச நேரம் சரியில்லே..."

யாமினி சுவரோரமாய் ஒடுங்கினாள்.

டாக்டர் கமலவேணி மேஜை மேலிருந்த இண்டர்காமின் ரிஸீவரை எடுத்துப் பிரபுவின் நெம்பரைச் சுழற்றினாள்.

"எஸ்... பிரபு..." மறுமுனையில் பிரபு பேசினார்.

"ஸார்... நான் டாக்டர் கமலவேணி பேசறேன்..."

"சொல்லுங்க டாக்டர்..."

"நீங்க கடைசியா அனுப்பிச்ச பொண்ணு... யாமினி..."

"ஆமா... அவளுக்கென்ன...?"

"அவளுக்கு விஷயம் தெரிஞ்சுடுச்சு ஸார்... காமிரா ஓடின சத்தத்தைக் கேட்டுட்டா. இப்போ இந்த அறையிலே ஒரேடியா ஆர்ப்பாட்டம் பண்ணிட்டிருக்கா..."

மறுமுனையில் பிரபு பரபரத்தார்.

"எப்படி... எப்படி... தெரிஞ்சுது அவளுக்கு...? அவளுக்குத்தெரியறமாதிரிஎல்லாத்தையும் எக்ஸிபிட் பண்ணினீங்களா?"

"இல்லே ஸார்... திடீர்னு கரெண்ட் ஃபெய்லியர் ஆனதுல—ஓடற ஃபேன் சத்தம் நின்னுடுச்சு...ஃபேன் நின்னுபோனதுதெரியாமே...

**ராஜேஷ்குமார்**



சந்திரபோஸ் காமிராவை ஓட்டிட்டார். அந்தச் சத்தம் அவ காதுல விழுந்துடுச்சு...''

''நான் இப்ப அங்கே வர்றேன்... அந்த யாமினி சத்தம் போடாதபடிக்கு வாயில பிளாஸ்டர் ஒட்டிக் கையையும் காலையும் கட்டிப் போடுங்க...''

''சரி ஸார்...''

பிரபு ரிஸீவரை வைத்துவிட்டு வெளியே வந்தார். மனத்துக்குள் கனன்ற ஆத்திரம் அவருடைய வெளுத்த முகத்தில் ஆரஞ்சு வர்ணத்தில் அலையோடியது.

கைக்கடிகாரத்தைப் பார்த்தார்.

மணி 4.45.

நாலரை மணிக்கே கம்பெனி தொழிலாளர்கள் எல்லோரும் மழையையும் பொருட்படுத்தாமல் — வெளியே கிளம்பியிருக்க — கம்பெனி வெறிச்சோடிப் போயிருந்தது.

மழை இன்னமும் பூமியோடு பேசிக் கொண்டிருந்தது. அந்த வராந்தாவில் வேக வேகமாய் நடந்து படிகள் செல்லை நோக்கிப் போனார். கதவைத் திறந்து வைத்துக் கொண்டு காத்திருந்த சந்திரபோஸ் — பிரபு உள்ளே வந்ததும்மறுபடியும்கதவைச்சாத்திக் கொண்டான்.

யாமினி சுவரோரமாய் எசகு பிசகாய் உருட்டப்பட்டிருந்தாள்.

வாயையும் மோவாயையும் அடைத்த செவ்வக பிளாஸ்டர்.

மிரண்ட கண்கள்...

அதில் பளபளக்கும் நீர்...

முதுகுக்குப் பின்னால் மடித்து வைக்கப்பட்டு — கட்டப்பட்ட கைகள். உள்ளே வந்த பிரபுவைப் பார்த்ததும் — யாமினி திமிறினாள். தலையை அப்படியும் இப்படியுமாய் ஆட்டினாள். கண்களில்தத்தளித்தநீர்காதோரமாய் உருண்டது.

பிரபு சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டார். இடது கையின் ஆட்காட்டி விரலால் மோவாயை லேசாய்ச் சொறிந்து கொண்டே கூப்பிட்டார்.

''ஸ்டெனோ கீதாவை மட்டும் இருக்கச் சொல்லு...''

சந்திரபோஸ் தலையாட்டிக் கொண்டே நகர — டாக்டர் கமலவேணி பிரபுவிடம் விடைபெற்றுக் கொண்டு அவனைத் தொடர்ந்தாள்.

அவர்கள் போனதும் —

மறுபடியும் கதவைச் சாத்திக் கொண்டு— உள்ளே வந்து — சுவரோரமாய் உருண்டு கிடந்த யாமினியிடம் குனிந்தார்.

''மிஸ் யாமினி...''

வாயை அடைத்திருந்த பிளாஸ்டரை எடுத்தார்.

எடுத்ததுமே யாமினி அழுகை வெடிக்கிற குரலில் சொன்னாள்: ''ஸார்... என்னை விட்டுடுங்க ஸார்... எங்கப்பாவும் அம்மாவும் என்னைத் தேடிட்டிருப்பாங்க... நான் இங்கே



நடந்த எதையுமே போலீஸ்ல சொல்ல மாட்டேன் ஸார்...''

''ஸாரி... மிஸ் யாமினி... உன்னை உயிரோட வெளியிலே அனுப்பிட்டா... எங்களுக்கு வயித்துல ஒரு வெடிகுண்டைக் கட்டிக்கிட்டுஇருக்கிறமாதிரியான அவஸ்தை வந்துடும்... எங்க கம்பெனியோட லாபகரமான தொழிலே இதுதானே... நியூடா இருக்கிற தமிழ்நாட்டுப் பெண்களோட போட்டோக்களுக்கு — மலேஷியா, சிங்கப்பூர் தேசங்களில் ஏகப்பட்ட கிராக்கி இருக்குன்னு தெரிஞ்ச பின்னாடிதான் — இந்த இண்டர்வியூக்களை நடத்த ஆரம்பிச்சிருக்கேன்... இதுவரைக்கும் ஏழு இண்டர்வியூக்களை நடத்தி, ஆயிரத்து முந்நூற்றுச் சில்லறை போட்டோக்களையும் — வீடியோ கேஸட்டுகளையும் எடுத்தாச்சு... இது எட்டாவது இண்டர்வியூ... இத்தனை நாட்களும் யாருக்குமே தெரியாமே இருந்த ஒரு ரகசியம் உனக்குத் தெரிஞ்சுடுச்சு... பைத்தியம் பிடிச்ச நாயையும், ரகசியத்தைத் தெரிஞ்சுக்

''சந்திரபோஸ்.''

''ஸார்...''

''டாக்டர் கமலவேணிக்குப் பணத்தைக் குடுத்து அனுப்பிச்சுடு... அடுத்த இண்டர்வியூவுக்கான தேதியை — நம்ம ஃபைலைப் பார்த்துச் சொல்லிடு...''

''சரி ஸார்...''

''ஒரு மணி நேரம் என்னோட பர்சனல் போன் ரிஸீவரை எடுத்துக் கீழே வெச்சுடு... யார்என்னைப்பார்க்கவந்தாலும்இல்லேன்னு சொல்லு...''

''சரி ஸார்...''

''ஆபீஸ் ஸ்டாஃப் எல்லாரும் போயிட்டாங்களா?''

''போயிருப்பாங்க ஸார்...''

''அப்படி யாராவது போகாமே இருந்து ஓ. டி. பார்த்திட்டிருந்தாங்கன்னா... மழையைக் காரணம் காட்டிச் சீக்கிரமா வீட்டுக்குப் போகச் சொல்லிடு...''

''சரி ஸார்...''





அடுத்த இதழில்...

# நதியா, ரேவதிக்குப் போட்டியா?

கலர்ஸ்டோரி

கிட்ட ஒற்றனையும் சுட்டுத் தள்ளணுங்கிறது ராணுவத்தோட விதி... அந்த விதி இந்தக் கம்பெனிக்கும் செல்லும் யாமினி...

யாமினி விம்மினாள். ''ஸார்! எங்கப் பாவும்எங்கம்மாவும்நான்வீட்டுக்குத் திரும்ப லைன்னு... மனசொடிஞ்சு போயிடுவாங்க ஸார்...''

''என்ன? சேலையைச் சரியாலே கட்டலை போலிருக்கே...'' பிரபு அவளுடைய உடம் பின் மேலிருந்த சேலையை உருவ, அவள் வீறிட்..ாள்.

''வேண்டாம்...' எடுக்காதீங்க...''

அவள் வீறிடலைப்பொருட்படுத்தாமல் —

அவள் திமிறத் திமிற —

தலைக்கு மேலே ஃபேன் கிர்ர்ர்ர்ரென்ற சத்தத்தோடு சுழன்று கொண்டிருக்க — வெளியே மழை தீவிரமாகியிருந்தது.

சரியாய் நாற்பது நிமிஷம் கழித்து வெளியே வந்தார் பிரபு. வராந்தாவில் காத் திருந்த சந்திரபோஸ் அவரை நோக்கி ஓடி வந்தான்.

''ஸார்...''

''டாக்டரம்மாவை அனுப்பிச்சுட்டியா...?' மெல்லிய குரலில் கேட்டார்.

''அனுப்பிச்சுட்டேன் ஸார்...''

''ஸ்டெனோ கீதா...?''

''நீங்க இருக்கச் சொன்னதாலே இருக்கா ஸார்...''

''சந்திரபோஸ்...!'' பிரபுவின் குரலில் கவலை தெரிந்தது.

''ஸார்...''

''யாமினி செத்துட்டா...! கொஞ்சம் ஃபோர்ஸ் பண்ணினேன்... அவளாலே முடி யலை... மூச்சை விட்டுட்டா... பாடியை யாருக் கும் தெரியாமே டிஸ்போஸ் பண்ணணும்... நீயும் கீதாவும்தான் அந்த டிஸ்போஸலைச் செய்யணும்...''

சந்திரபோஸ் அதிர்ச்சியோடு அவரைப் பார்த்தான்.

பிரபு தலையைக் கோதிக் கொண்டார். ''கஷ்டமான காரியம்தான். எனக்குத் தெரி யும்... ஆனா உங்க ரெண்டு பேரையும் நம்பற மாதிரி நான் யாரையும் நம்ப முடியாது... பாடியை சக்சஸ்புல்லா டிஸ்போஸ் பண் ணிட்டு நாளைக்குக் காலையிலே வாங்க... ஒரு நல்ல வெகுமதிப் பணம் தர்றேன்...''

தலையாட்டினான் சந்திரபோஸ்.

பிரபு லேசான தளர்வோடு — தன் அறையை நோக்கிப் போனார்.

சந்திரபோஸ் மெடிகல் செல்லுக்குள் நுழைந்தான்.

யாமினி கைகளையும், கால்களையும் பரத் திக் கொண்டு பிணமாகியிருந்தாள். உதட் டின் வலது பக்கம் செவேலென்று ஒரு ரத்தக் கோடு வழிந்து கழுத்து வரைக்கும் போயி ருந்தது. பொட்டு கலைந்து — கன்னங்களில் ஏராளமான கீறல்களோடு செத்திருந்தாள் யாமினி. அவள் பிணமாகிப் போனபின் — மானத்தைக்காக்கவேண்டும்என்றநல்லெண் ணத்தில் — அவள் மேல் சேலையை எடுத்துப் போர்த்தியிருந்தார் பிரபு.

சந்திரபோஸ் அவளருகே குனிந்து — அந்தச் சேலையிலேயே — அவள் உடம்பை ஒரு மூட்டை மாதிரி கட்டி — கவரோரமாய்க் கொண்டு போய் வைத்தான்.

அதே விநாடி இண்டர்காம் வீ... வீ... வீ... என்று வீறிட — ஓடிப் போய் ரிஸீவரை எடுத் தான். மறுமுனையில் பிரபு பேசினார்.

''சந்திரபோஸ்...''

''ஸார்...''

''கம்பெனிகாம்பௌண்ட்கேட்சென்ட்ரி கிட்டேயிருந்து ஒரு செய்தி வந்திருக்கு...''

''என்ன ஸார்...''

''யாமினியைத் தேடிக்கிட்டு அவளோட அப்பா வந்திருக்காராம்... விவரம் புரியாத சென்ட்ரி யாமினி இன்னும் வெளியே போகலை... உள்ளேதான் இருக்கான்னு சொல்லிட்டான்... அவளோட அப்பா... இப்போ உள்ளே வந்திட்டிருக்கார்... அவ ரைச் சமாளிச்சு அனுப்பணும்... உன்னால் முடியுமா...? சந்திரபோஸ்...?''

சந்திரபோஸின் இருதயம் முதல்தடவை யாய் —

அசுர கதியில் —

துடிக்க ஆரம்பித்தது.

(தொடரும்)

வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்




சத்துமிகுந்த, சுவையான பிஸ்கட்.




LINTAS BIN MB 12 2517 TM

## 14

அருணாவுக்கு இருப்புக் கொள்ளவில்லை. மனத்துக்குள் சமீப காலமாகப் பல வேறு கவலைகள் அவளை அரிக்கத் துவங்கி இருந்தன. ஐஸ்வர்யா முன் போலப் பேசுவதோ, பழகுவதோ இல்லை. நேரம் கெட்ட நேரத்தில் வெளியே புறப்பட்டுப் போய் விடுகிறாள். அவள் கணவன் கணேசனைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். சாதாரண நாட்களிலேயே வீட்டில் சாப்பிட வரும் நேரத்தைச் சொல்ல முடியாது. இப்போது அலுவலகத்தில் வெளிநாட்டிலிருந்து வந்திருக்கும் தொழில் விற்பன்னர்களுடன் அலைந்து கொண்டிருந்தார்.

அஸ்வத் மட்டும் விட்டவனா என்ன? அவனும்தான் ஒரு நிமிடம் தலையைக் காட்டுகிறான். திடுமென வெளியே போகிறான். அவனுக்கு மகனைப் பற்றிய பெரிய கவலை விஸ்வரூபம் எடுத்துவிட்டிருந்தது.

இரண்டு நாட்களுக்கு முன்னர்தான் அருணா அவளது தோழி மூலம் கிடைத்த பெரிய இடத்துச் சம்பந்தம் ஒன்றிற்காகப் பலமாக வலைவிரித்து வைத்திருந்தாள். பிரபல சிமெண்ட் விநியோகஸ்தர் வீட்டு ஒரே மகள். பார்க்க அழகாக, ஒடிய, ஒடிய, உயரமாக இருந்தாள். ஒரு சில பெரிய மனிதர் வீட்டுப் பெண்களின் அபரிமிதமான நாகரிகம் அவளிடம் இருந்தது. ஒட்ட வெட்டிய கிராப் தலை. இடதுபுற மூக்கில் ஒற்றைக் கல் வைரம். ஸ்லாக் பாண்ட் உடையலங்காரம். என்றிருந்தாலும், வீணை வாசித்தாள். பரத நாட்டியம் மேடையேறி இருந்தாள். கோவிலுக்குப் போகும்பொழுது, அகலக் கரை போட்ட பட்டுச்சேலையும் அதே பட்டில் ரவிக்கையும் போட்டுக் கொண்டு, வெளியே புறப்படும் நாசூக்குத் தெரிந்தவள், எம். ஏ. பொருளாதாரம், முதலாம் ஆண்டு படிக்கிற பெண். அருணாவுக்கு அந்தப் பெண், திவ்யாவைப் பார்த்த மாத்திரத்திலேயே பிடித்து விட்டது.

''ஜாதகம் பார்க்கணும்னு கூட இல்லே. பேசாமல்பொண்ணும்,பிள்ளையும்பார்த்துப் பிடித்துவிட்டால் போறும்னு சொல்லிடு,'' தூது நடந்த தோழியிடம் சொல்லி அனுப்பினாள். மனத்தினுள், அயல்நாட்டுக் காரில் மருமகளுடன் கடை வீதிகளில் பவனி வந்து மகிழ்ந்து கொண்டிருந்தாள். ''திவ்யாவை, அஸ்வத் வேண்டாம்னு சொல்லவா போகிறான்?'' என்று தனக்குள்ளே தீர்மானித்தவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை.

''பிற்பகல் அஸ்வத் சாப்பிட வரும் நேரம். ஐஸ்வர்யா வீட்டில் இல்லை. குழந்தை அட்டகாசம்யாவும்செய்துஓய்ந்து அப்போது தான் சிறிது கண்ணயர்ந்திருந்தான். கணேசனும் சாப்பாட்டிற்கு வந்துவிட்டால், சாப்பாட்டு மேஜை மீதே பிள்ளையை மடக்கலாம் என்ற துணிவில்' இருந்தாள் அருணா.

டெலிபோன் சிணுங்கியது. ஓடிச் சென்று எடுத்த அருணாவின் முகம் கோபத்தால் சூடேறிச் சிவந்தது. ''என்னது? சாப்பிட வர மாட்டேளா? ஆமா... என்னிக்கு ஒழுங்கா வீட்டுக்குச் சாப்பிட வந்திருக்கேள்?'' என்று அலுத்தபடி போனை வைத்தாள். அவள் கணவர் வெளிநாட்டு விருந்தினருடன், ஐந்து நட்சத்திர ஓட்டலுக்குச் சாப்பிடப் போகிறாராம்.

கோபத்துடன் முன்னறைப் பக்கம் வந்து எட்டிப் பார்த்தாள். வாயிற்புறம் 'விர்'ரென்று வந்து நின்ற டாக்ஸியிலிருந்து அஸ்வத் இறங்கிக் கொண்டிருந்தான்.

''அப்பாடா! இவனாவது வந்து சேர்ந்தானே'' என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டவளாய் உள்பக்கம் சென்றாள்.

அஸ்வத், வேகமாக முன்னறையைத் தாண்டி, பின்பக்கம் உள்ள வாஷ்பேஸின் அருகில் சென்றான்.

சாப்பாட்டறை மேஜை மீது, தட்டைத் துடைத்து வைத்துவிட்டு, சமைத்தவைகளைப் பாத்திரங்களில் நிரப்பி, அருகில் வைத்துக் கொண்டாள். ''இவனை இப்படியே விட்டால்..?'' மனத்தில் துணிவை வரவழைத்துக் கொண்டவளாய், ''அஸ்வத்! சாப்பிட வரலியா? நாழியாச்சே.

# இசோர்க்கத்தின் கிறுவுகள்

லக்ஷ்மி



பசிக்காதா உனக்கு?'' என்று உரக்கக் குரல் கொடுத்தாள்.

''வரேன்ம்மா,'' அஸ்வத் கைகளைத் துண்டினால் துடைத்தபடி அங்கு வந்து அமர்ந்து கொண்டான். கலைந்து போன கிராப் தலை. களைத்துப் போன முகம்.

''எதுக்கு அஸ்வத் இப்படி வெளியே அலைஞ்சு உடம்பைக் கெடுத்துக்கறே? கொஞ்ச நாட்கள் லீவில் வந்திருக்கே. வீட்டில் தங்கி, சாப்பிட்டு, ஓய்வு எடுத்துக் கொள்ளக்கூடாதா?'' என்று அன்பும், உரிமையுமாகக் கூறியபடி, பரிமாற ஆரம்பித்தாள்.

''ஐஸ்வர்யா சாப்பிட்டாச்சா? எங்கே அவளைக் காணோம்?'' தட்டில் இருந்த உருளைக்கிழங்கைச் சுவைத்தபடி கேட்டான் அஸ்வத்.

அருணா கோபத்துடன் முகம் சுளித்தாள். ''ஆமாம். நீ ஒரு பக்கம் ஊரையெல்லாம் சுற்றிக் கொண்டு வரே. அவள் இன்னொரு பக்கம் சுற்றக் கிளம்பிவிட்டாள். இந்தக் காலத்தில், பெத்தவாளை யார் மதிக்கிறா...?''

அஸ்வத், தாயை ஒருகணம் பார்த்தான். ''இப்ப என்ன செஞ்சா, பெத்தவாளை மதிக்கிறதா நினைக்கறேம்மா? ஐஸ்வர்யா கிட்டேயும் சொல்லிடலாம், அம்மா அப்பாவை மதிக்கிறது எப்படின்னு?''

''கிண்டல் வேணாம். ஐஸ்வர்யா இன்னொருத்தர் வீட்டுப் பொண்ணு. இனிமேல் உன்னைப் பத்தித்தான் கவலைப்படணும் எனக்கு.''

அஸ்வத்தின் புருவங்கள் ஆச்சரியத்துடன் நெரிந்தன.

''கொஞ்சம் முருங்கைக்காய் சாம்பார் போட்டுக்கோயேன். உனக்குப் பிடிக்கும்னு ஸ்பெஷலா உருளைக் கிழங்கு 'ரோஸ்ட்' வெச்சேன். சாப்பிடு.'' என்று பலமாக உபசரித்தபடி, மகனை ஆசையுடன் பார்த்தாள்.

''ரொம்பப் போடாதேம்மா. எனக்கு



# அருள் வாக்கு



'நம் கர்மாவுக்காகத்தான் கஷ்டம் வருகிறது. பகவானேதான் இந்தக் கஷ்டங்களைக் கொடுத்து, தண்டித்து, கர்மாவைத் தீர்க்கிறான். அதனால் இந்த மாதிரி லௌகிக விஷயங்களுக்குப்பிரார்த்தனை பண்ணவே கூடாது. பகவானுக்கே நமக்கு எதை எப்போது எப்படித் தர வேண்டும் என்று தெரியும். அதனால் அவனை எதுவும் ப்ரார்த்திக்கவே கூடாது. அவனை ஸ்மரித்தால் அது ஆனந்தமாக இருக்கிறதல்லவா? இந்த ஆனந்தம் ஒன்றுக்காக மட்டுமே ஸ்மரிக்க வேண்டும். பக்தி பண்ணுவதற்குப் பலன் பக்தியில் கிடைக்கிற மன நிறைவே தான். இந்தப் பெரிய நிறைவை விட்டுவிட்டு, பக்தியைச் சின்னச் சின்ன தாற்காலிக நிறைவுகளுக்கு ஒரு உபாயமாக வைத்துக் கொள்வது ரொம்பவும் தப்பு. ஆகையால், 'அது வேண்டும், இது வேண்டும்' என்று வேண்டவே கூடாது. எதற்காவது ப்ரார்த்தனை பண்ணலாமானால், அது நம்முடைய ஆத்ம பரிசுத்தி ஒன்றுக்காகத்தான்'— என்று இப்படிச் சிலர் அபிப்ராயப் படுகிறார்கள்.

நாம் எதை எடுத்துக் கொள்வது? பகவானே சொல்கிற வார்த்தைதான் நமக்குப் பெரிய பிரமாணம். கீதையில் இது விஷயமாக ஸ்வாமி என்ன சொல்கிறார்? அடுத்த இதழில் பார்க்கலாம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்.

ஏற்கெனவே 'வெயிட்' போட்டிருக்குன்னு கவலையா இருக்கு!''

''போடா கிறுக்கு. கல்யாணத்துக்கு இருக்கிற பையன். நன்றாகச் சாப்பிட்டு, திடகாத்திரமா இருக்க வேணாமா?''

''ஏதேது! சொல்றதைப் பார்த்தால், கல்யாண மார்க்கெட்டில் எனக்கு ஏகப்பட்ட 'டிமாண்ட்' இருக்கும் போலத் தெரியறது!'' என்று அஸ்வத் உரக்கச் சிரித்தான்.

பொய்க்கோபத்துடன், ''படிச்சவன், நல்ல வேலை. பெரிய எடம். பார்க்க லட்சணமானவன்னு ஊரில், பொண்ணைப் பெத்தவர்கள் சும்மா இருப்பார்களா?'' என்றாள் அருணா.

அஸ்வத் சிரிப்பைச் சட்டென்று நிறுத்திவிட்டு, ''இப்ப எதுக்கு இந்தப் பேச்சு?'' என்றான்.

''இதோ பாரு அஸ்வத்! இப்படியே நீ காலத்தைக் கடத்திண்டிருக்கிறதிலே அர்த்தம் இல்லை. எல்லாம் நடக்க வேண்டிய சமயத்தில் நடந்தால்தான் அழகு'' என்று மெல்ல ஆரம்பித்தாள் அருணா.

தோளுக்கும் மிஞ்சினால் தோழன் என்பார்களே. அதிலும் வேலைக்குச் செல்லும் பிள்ளை. சட்டென்று முகத்தில் அறைந்தது போலப் பதில் கூறிவிட்டால்...? அருணாவால் பொறுத்துக் கொள்ள முடியுமா என்ன?

அருணா, தன் மகனையோ, மகளையோ வெகுவாகச் சிரமப்பட்டு வளர்த்தவளே அல்ல. அவளது பொறுமையில்லாத குணத்திற்கும், குழந்தைகளின் வளரும், அறியும் தன்மைக்கும் எப்போதுமே ஒரு போராட்டம் நடந்ததுண்டு.

'குழந்தைக்கு என்னம்மா தெரியும்? அவன் தான் கோபத்தில் புஸ்தகத்தை உன் மேல் விட்டெறிஞ்சுட்டான்னா, பதிலுக்கு நீயும் அவன் மேலே புஸ்தகத்தை விட்டெறியலாமா? பொறுமையா எடுத்துச் சொல்லணும்'' என்று ஸ்வாமிநாதன் உபதேசிப்பார்.

விமலாவிற்கும் குழந்தைகள் மீது உயிர். ''குலாப் ஜாமூன் பண்ணினால், அஸ்வத்துக்குப் பிடிக்கும். தனியா எடுத்து ஒரு நாலைஞ்சை, டப்பாவில் போட்டு மூடி வச்சுட்டேன்,'' என்பாள்.

''ஐஸ்வர்யாவுக்கு, இந்த ரவை கேக் ரொம்பப் பிரியம்னு வைச்சிருக்கேன்'' விமலா தனியாக வைத்துவிடுவாள். படிப்பு எதிர்காலம் எல்லாவற்றிலும் அவளது ஓரகத்தியும் மைத்துனருமே முதலிடம் வகிக்க அனுமதிப்பதா? ஐஸ்வர்யாவின் கல்யாணம், ஸ்வாமிநாதனின் தலையீட்டால் நடந்து முடிந்த விஷயம். இனி அவளது மகனின் கல்யாணத்தை, அவள்தான் முன்னின்று நிச்சயம் செய்வாள்!

''பீடிகையெல்லாம் வேணாம். சுற்றி வளைக்காமல், சட்டுனு விஷயத்துக்கு வாம்மா!'' பொறுமையை இழந்தவனாய், தட்டில் விழுந்த கட்டித் தயிரை வெறித்தான் அவன்.

அருணா தொண்டையைச் செருமிக் கொண்டாள். ''உனக்குக் கல்யாணம் செஞ்

சுக்கணும்னு அபிப்பிராயம் இருக்கா?''

''தாராளமாய். நான் எக்காரணத்தைக் கொண்டும் சந்நியாசியாகப் போக விரும்பவில்லே'' என்று சிரித்தான் அவன்.

அருணாவுக்கு உற்சாகம். ''அப்படின்னா, உனக்காக ஒரு பெண் பார்த்திருக்கேன். ரொம்ப அழகு. உயர்ந்த இடம். நீ மட்டும் அவளைப் பார்த்துவிட்டு 'ஓ. கே.' என்று சொல்லிவிட்டால் போதும்.''

''பெண் கூடப் பார்த்தாச்சா?'' அவன் குரலில் கிண்டல் நிலவியது.

''ஆமாம் அஸ்வத். பேரு கூட திவ்யா. வீணை வாசிப்பா. பாடுவா, டான்ஸ் ஆடுவா ...''

''நீங்க பொண்ணைப் பார்த்தேளா?''

''பார்த்தேனே. அப்ப எனக்கு உடனே உன் ஞாபகம் வந்தது. கல்யாணப் பந்தல்லே, ரெண்டு பேரும் நின்னா, ஜோடியா அழகாக இருக்கும்.''

''எல்லாம் நீங்களே முடிவு செய்தாச்சா?'' அவன் குரலில் சூடேறியிருந்தது.

''அதுக்கில்லே அஸ்வத்? நீயும் பொண்ணைப் பார்த்துவிட்டால்...?''

கையை உதறியவன், சினத்துடன் எழுந்தான். ''அம்மா! கல்யாணம்கிறது என்னோட சொந்த விஷயம்.''

அருணா திகைத்துப் போனாள். பிறகு சமாளித்து, ''நீ சரின்னு சொன்னதுக்கப்புறம் தான்...'' என்று தடுமாறினாள்.

''அம்மா! என் கல்யாணம். அது என்னோட சொந்த விஷயம். இதிலே யாருக்கும் தலையிட அதிகாரம் கிடையாது.'' வேகமாகச் சென்று கைகளைக் கழுவி வாயைத் துடைத்தபடி திரும்பி வந்தான்.

அருணாவின் முகம் அவமானத்தால் சுருங்கிப் போயிற்று. ''பெத்தவாளுக்கு இல்லாத உரிமையா?'' என்றாள், ஆத்திரமாக.

''கல்யாணம்கிறது என்னோட பிறப்புரிமை.''

அருணாவின் பொறுமை உடைந்து போனது. ''பேஷ்! நானென்ன அப்படித் தெருவில் போகிற பொண்ணையா கல்யாணம் செய்து கொள்ளச் சொன்னேன். நீ பார்த்து, சரி என்று சொன்னதுக்கப்புறம் தான் கல்யாணம்னு சொன்னேன். இதுக்கு ஏன் அப்படிக் கூச்சல் போடறே. பெத்தவாளுக்குக் குழந்தைகள் நன்னா இருக்கணும்னு ஆசை இருக்கப்படாதா, என்ன?''

அஸ்வத் தாயை முறைத்துப் பார்த்தான். அருணாவின் உடல் கிலியில் நடுங்கியது. என்ன இது? அவள் பெற்றமகன், அந்நியனைப் போல அவளிடமே நடந்து கொள்கிறான்? கல்யாணம் செய்து கொள்கிற எண்ணம் உண்டா இல்லையா? என்று கேட்டுக் கொண்டுதானே அவள் பேச ஆரம்பித்தாள். பின் எதற்காக இவன் இப்படி உறுமுகிறான்?

''அம்மா! ப்ளீஸ். நான் கல்யாணம் கட்டாயம் செஞ்சுக்கப் போறேன், போதுமா?''

அருணா வியப்புடன், ''முன்னுக்குப் பின் முரணாகப் பேசினால் யாருக்குப் புரிகிறது?'' என்றாள்.

''முரணே இல்லே. என் கல்யாணம் நடக்கும். ஆனால் நீங்க பார்த்து வச்சிருக்கிற பெண்ணோட இல்லே.'' என்றான் அழுத்தமாக.

அருணா அதிர்ந்து போனாள். ஓராயிரம் பேரிடிகள் அவளது ஆசைக் கோட்டை மீது விழுந்து சுக்குநூறாக நொறுங்கிப் போன உணர்வு நெஞ்சை அழுத்த, கண்களில் ஏமாற்றத்தால் நீர் கசிய, ''என்ன சொல்றே?'' என்று கேட்டாள்.

''என் மனைவியை நானே தேர்ந்தெடுத்து விட்டேன். அனாவசியமான சிரமப்பட வேண்டாம்னு சொன்னேன். பெரியப்பாகிட்டக் கேட்டு ஆலோசித்து முடிவு எடுத்தாகிவிட்டது...''

அவன் பேசப் பேச ஏமாற்றம், துயரம், ஆத்திரம் போன்ற உணர்ச்சிகளால் அருணா திணறினாள். ''பெரியப்பா! பெரியப்பா! பெரியப்பா!'' 'ஓ'வென்று கத்திக் கூச்சலிட வேண்டும் போன்ற ஆவேசம் பீறிட, ''நிறுத்திக்கோ'' என்று கூக்குரல் இட்டாள் அவள்!

(தொடரும்)

## 101 அடி நீள கிறிஸ்துமஸ் கார்டு!



கேரளாவில் இடுக்கி மாவட்டம் வண்டிப் பெரியார் அருகே கிராம்பி என்ற இடத்தைச் சேர்ந்த ரீகன் ஜோன்ஸ், பிரதமர் ராஜீவ் காந்திக்கு 101 அடி நீளமும் 2 அடி அகலமும் கொண்ட கிறிஸ்துமஸ் கார்டு ஒன்றை அனுப்பியிருக்கிறார்.

இதில் மொத்தம் 2 லட்சத்து 50 ஆயிரம் வார்த்தைகளும், ஒரு வார்த்தையில் 103 எழுத்துக்களடங்கிய மொத்தம் 6 நீளமான ஆங்கில வார்த்தைகளும் ராஜீவ், ரீகன், போப் ஜான்பால், இந்திரா காந்தி, எம்.ஜி.ஆர். இவர்களின் படங்களும், மற்றும் பல்வேறு மொழிகளில் வாழ்த்துக்களும் இடம் பெற்றுள்ளன!

ஆதாரம்: இந்தியன் எக்ஸ்பிரஸ்

ராஜிராதா.




# பணத்துக்காகச் சில கிறுக்குப் பிரியர்கள்!

சி.இராமச்சந்திரன்

''என்னய்யா என்ன கூட்டம்?'' என்றேன் அவர்களை நெருங்கி, ''சார்! டிரைவர் பாலு முத்துசாமி காதைப் பிடிச்சுக் கடிச்சிட்டான் ஸார்!''

மூக்கில் ரத்தம் வடிய எங்கோ பார்த்துக் கொண்டிருந்தான் பாலு. முத்துச்சாமியின் காதில் மருந்து வைத்துக் கட்டிக் கொண்டிருந்தார்கள்.

இன்று ஆபீஸ் கிளம்பிக் கொண்டிருக்கையிலேயே அம்மா என் கல்யாணப் புராணத்தைப் பாட ஆரம்பித்துவிட்டாள். (இதுவரை சாயங்கால வேளைகளில்தான் பாடிக் கொண்டிருந்தாள்!)

''ஏண்டா கணேஷ், நீ மனசுல யாரை யாவது நினைச்சுக்கிட்டிருக்கியா?'' என்றாள் திடீரென்று.

கேள்விக் குறியுடன் பார்த்தேன்.

''பின்னே என்ன? மூணு நாளா சொல்றேன். வாடா அந்த வக்கில் வீட்டுப் பெண்ணைப் பார்த்துவிட்டு வருவோம்னு. நீ பாட்டுக்கு மழுப்பிக்கிட்டே போறியே?''

''ஏம்மா, உனக்கு வேறே வேலையே இல்லையா?''

''என்னடா நீ இதுவரைக்கும் வேலை உயர்வு வரட்டும்னு சொன்னே. அதுவும் வந்தாச்சு. ட்ரான்ஸ்போர்ட்ல மானேஜர் வேலைங்கவும் அவங்க அவுங்க நான் முந்தி, நீ முந்தின்னு பெண் கொடுக்கத் தயாரா இருக்காங்க! ஒரு நல்ல பெண்ணைய் உனக்குத் தேர்ந்தெடுக்கிறதைவிட வேறே வேலை என்ன எனக்கு?''

''அம்மா உன்கிட்ட பேச இப்ப நேரமில்லே. ஏற்கெனவே பத்து நிமிசம் லேட் உன்னாலே. சாயந்தரம் நான் வந்தவுடன் பொண்ணைப் பத்திப் பேசிக்குவோம். வரட்டுமா?''

''ம்! இந்தக் காலத்துப் பசங்களையே புரிஞ்சிக்க முடியலையே!'' என்ற என் அம்மாவின் பெருமூச்சு தேய்ந்து வந்து என் காதில் விழும் பொழுது நான் வாசலைக் கடந்திருந்தேன்.

டிப்போவில் நுழைகையில் கேட்டிலேயே நான் மரத்தடியில் நின்ற கூட்டத்தைப் பார்த்துவிட்டேன். ஏதோ 'அடிதடி' போலிருந்தது.

சே! இந்தக் கார்ப்பரேஷனுக்குப் பேர் மாத்தினதும் போதும் ஆளுக்காள் வீரனு விட்டாங்க!

''என்னய்யா என்ன கூட்டம்?'' என்றேன் அவர்களை நெருங்கி.

''சார்! டிரைவர் பாலு, முத்துச்சாமி காதைப் புடிச்சுக் கடிச்சுட்டான் சார்.''

மூக்கில் ரத்தம் வடிய எங்கோ பார்த்துக் கொண்டிருந்தான் பாலு. முத்துச்சாமியின் காதில் மருந்து வைத்துக் கட்டிக் கொண்டிருந்தார்கள். முத்துச்சாமி ஒரு மெக்கானிக்.

பாலுவைப் பார்த்த எல்லோர் பார்வையிலும் வெறுப்பிருந்தது.

''ஏம்ப்பா அவரு காதைக் கடிச்சே?'' — என்றேன் பாலுவிடம்.

பதிலில்லை பாலுவிடமிருந்து.

''சார்! அவனுக்கு இதே பொழைப்பாய்ப் போச்சு சார்! அன்னைக்கி சேலம் வண்டியில ஒரு பாசஞ்சர் காதைப் புடிச்சுக் கடிச்சுட்டான் சார்!'' எனக் கும்பலிலிருந்து ஒரு குரல் வந்தது.

ஏற்கெனவே பாலு 'கிறுக்கு' என்று இந்த டிப்போவில் பெயர் வாங்கியிருந்தான்.

''ஏய்யா! அவன்தான் கிறுக்கனாச்சே, அவன்கிட்டே என்னய்யா தகராறு உனக்கு?'' என்றார் என் அருகில் நின்ற கிளார்க் மணி முத்துச்சாமியிடம்.

''இவனா சார் கிறுக்கன்? சம்பளக் கவரை வாங்கிக் கிழிச்சா போட்டுடறான்? இல்லே, மதுரை வண்டியை மெட்ராஸ் பக்கம் ஓட்டிக்கிட்டுப் போறானா?'' என்றான் முத்துச்சாமி வேகமாக.

மெட்ராஸ் வண்டின்னு சொன்ன உடனே எனக்கு ஒரு வாரம் முன்பு பாலு செய்த செயல் நினைவுக்கு வந்தது.

அன்று பாலுவுக்கு விழுப்புரம் டூட்டி. இரவு மணி 8.00 இருக்கும். வண்டியில் ஃபுல் சிட்டிங் பாசஞ்சர்ஸோட செக்யூரிட்டிகிட்ட மசல் போடப் போறேன்னு சொல்லிவிட்டுச் செட்டுக்குள்ளே வண்டியைக் கொண்டு வந்து நிறுத்திவிட்டு என்னிடம் வந்தான்.

''சார், பஸ் ஸ்டாண்ட்லே மெட்ராஸுக்குப் பயங்கர கும்பல் சார். பாசஞ்சர்ஸ் என்னை விடமாட்டேன்னு தொல்லை பண்ணுறாங்க சார். ஏத்திக்கிட்டு வந்துட்டேன். ஒரு ட்ரிப் மெட்ராஸ் போயிட்டு வந்துடட்டுமா?'' என்றான்.

இரவு 8.20க்கு இங்கிருந்து மெட்ராஸ் புறப்பட வேண்டிய எங்கள் 'ட்ரிப்' வண்டி ரிப்பேர்ங்கிறதாலே, அப்பொழுதுதான் ஒரு ஸ்பேர் பஸ்ஸை அனுப்பியிருந்தேன்.

இவன் கூறியதைக் கேட்டவுடன் என்னால் மறுக்கமுடியவில்லை. ஏனெனில் ஃபுல்சிட்டிங்குக்கு எப்படியும் ரூ 2000 பக்கமாய் கலெக்‌ஷன் வரும். இரண்டாவது, பாசஞ்சர்ஸை வேறே வச்சுக்கிட்டு இவன்கிட்ட பேசிக்கிட்டு இருக்க முடியாது. மேலும் கும்பலும் ஒரு நேரத்தில் இருக்கிற மாதிரி அப்புறம் இருக்காது.

''சரி ஸ்பேர் பஸ்ஸை விழுப்புரம் அனுப்பிடறேன். நீ மெட்ராஸ் போய் அங்கேயே 'ஹால்ட்' ஆயிட்டுக் காலையில் அந்த வண்டிக்கு 4.10 டயம், அங்கிருந்து டிக்கெட்

ஏத்திக்கிட்டு வந்து விடு'' என்றேன்.

''சரிங்கசார்!'' என்றுவண்டியைஎடுத்துக் கொண்டு போய்விட்டான்.

அவன் சென்ற பத்து நிமிஷங்களுக்கெல்லாம் நான் அனுப்பிய ஸ்பேர் பஸ் உள்ளே வந்தது.

அந்த வண்டி டிரைவர் வந்து, ''சார்! இந்த பாலு பயலுக்கு இன்னைக்கு விழுப்புரம் டூட்டிதானே சார்?'' 'மெட்ராஸ்', மெட்ராஸுன்னு கத்தி பஸ் ஸ்டாண்ட்ல டிக்கெட் ஏத்திக்கிட்டுப் போயிருக்கான் சார். இப்ப ஒரு டிக்கெட் கூட இல்லே சார் மெட்ராஸுக்கு!'' என்றார் வருத்தமாக.

''அப்படியா. சரி அவன் வரட்டும் நான் விசாரிக்கிறேன். நீங்க விழுப்புரம் டியூட்டி பார்த்திடுங்க'' என அவரைச் சமாதானப் படுத்தி அனுப்புவதற்குள் எனக்குப் போதும் போதும் என்றாகிவிட்டது.

'கலெக்ஷன் பேட்டா'வுக்காக இப்படிச் செய்திருப்பானோ?

''சரி தகராறு என்னன்னு நீதான் சொல்லேன்யா'' என்றேன் முத்துச்சாமியிடம்.

''கண்டக்டர் ராமய்யா 'கிறுக்கன்' செய்த வீரச் செயல் தெரியுமான்னாரு சார்.''

''சரி.''

''ஆற்றிலே வண்டியை எறக்கிட்டு 'மெமோ' வாங்கினதுதானே? எனக்குத் தெரியும்னு நான் சொன்னேன் சார்.''

அந்த நிகழ்ச்சி என் நினைவுக்கு வந்தது. நாலைந்து நாளைக்கு முன்னால் நடந்தது.

**அ**ன்று கொள்ளிடம் பாலத்தில் ஏதோ ஆக்ஸிடெண்ட் என்கிறதுனாலே, 'ட்ராபிக் ஜாமா'கி எல்லா வண்டிகளும் வரிசையாய் நின்றன. இவனுக்கு அன்று சேலம் டூட்டி. ட்ராபிக் 'ஜாம்' ஆனதைப் பார்த்த இவன் லாரிகள் மணல் எடுக்க ஆற்றுக்குள் செல்லும் பாதையில் வண்டியை ஆற்றுக்குள் இறக்கி (நீரில்லே, ஆற்றில் வெறும் மணல் தான்) எதிர்க்கரையில் ஏறிச் சேலம் சென்று விட்டான். அங்கிருந்து படிக்கட்டுல தொங்கிக்கிட்டு வர்ற அளவுக்கு டிக்கெட் ஏத்திக்கிட்டு இவன் திரும்பி வந்துவிட்டான். அப்பொழுதுதான் ட்ராபிக் கிளியராகி வண்டிகள் நகரத் தொடங்கியிருந்தன. புகார் தலைமையகத்துக்குச் சென்றது.

'வண்டியில் உள்ள பாசஞ்சர்ஸ் மற்றும் வண்டியின் மதிப்பை அலட்சியப்படுத்தி இது போன்ற அபாயகரமான செயலில் நீங்கள் இறங்கியதற்கு உங்கள் மீது ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது? பத்து நாட்களுக்குள் விளக்கம் அளிக்கவும்' என்று 'மெமோ' வந்தது இவனுக்கு. ஓவர் லோடுன்னு கண்டக்டர்க்கு வேறே இல்லால் ஒரு 'மெமோ!'

இதையும் கலெக்ஷன் படிக்காகத்தான் இவன் செய்திருப்பானோ?

''சொல்லுய்யா, அப்புறம்'' என்றேன் முத்துச்சாமியிடம்.

''நாங்க பேசிக்கிட்டிருந்தப்ப இவன் வந்தான் சார்! நானும் ராமய்யாவும் ஏன் பாலு! பேப்பரை (மெமோவை) குறைச்சுக்கக் கூடாதா? வாரம் நாலைந்து வாங்குவே போலிருக்கேன்னேம் சார்!''

''ம்.''

''எனக்குத் தெரியுமுல்லே'' என்றான் இவன்.

''சரி.''

''ஏம்பா பணத்துக்காகவா இப்படிக் கிறுக்கு காரியமெல்லாம் செய்யறே? உனக்கு என்ன அப்படிச் செலவு'' என்றார் சார் ராமய்யா.''

''ம்.''

''நான் 'தங்கச்சிக்குக்கல்யாணம்பண்ணப் போறார்ல ஐயா அதனாலேயா இருக்கும்'' என்றேன் சார். அதுக்குள்ள ஓடியாந்து என் காதைக் கடிச்சுப்புட்டான் சார்'' என நிறுத்தினான்.

''சரி நான் ஆக்ஷன் எடுக்கிறேன் எல்லோரும் போய் வேலையைக் கவனியுங்க'' என்று அனுப்பிவிட்டு என் அறைக்கு வந்தேன்.

சிறிது நேரம் கழித்து என் ரூம் ஜன்னல் வழியாக மரத்தடியைப் பார்த்தேன். எல்லோரும் கலைந்து சென்றிருந்தனர். பாலு அங்கேயே நின்று கொண்டிருந்தான். அவன் மூக்கில் ரத்தம் காய்ந்திருந்தது.

எனக்குள் சின்ன உறுத்தல். என்னதான் எல்லோரும் இவனைக் 'கிறுக்கன்' என்று சொன்னாலும் சும்மா பேசிக்கிட்டிருக்கிறப்ப இவன் ஏன் கடிக்கிறான்? தங்கச்சி கல்யாணம்னு சொன்னதில் என்ன தப்பு? ம்.... ஏதோ காரணம் இருக்க வேண்டும்.

'இன்றைக்கு இவனுக்கு லீவாச்சே, இவன் ஏன் ஷெட்டுக்கு வந்தான்?'

**நா**ன் எழுந்து அவனருகில் சென்றேன். அவனது தோளில் கை வைத்து மெல்ல 'பாலு' என்றேன். என்னை ஏறிட்டுப் பார்த்துக் குலுங்கி அழ ஆரம்பித்தான் (கிறுக்கு அழுகையோ!)

மெல்ல அவனைத் தேற்றி என் அறைக்கு அழைத்து வந்தேன். துணியைத் தண்ணீரில் நனைத்து அவனது காய்ந்த ரத்தத்தினைத் துடைத்துவிட்டு முகம் கழுவச் செய்தேன். பையனிடம் இரண்டு காப்பி கொண்டு வரச் சொல்லி ஒன்றை அவனிடம் கொடுத்து 'குடி' என்றேன்.

அவள் : நம்ம கல்யாணம் நடக்குமா?"

அவன் : உனக்கு எப்போன்னு தெரியலே. எனக்கு அடுத்த மாசம் ஏழாம் தேதி நடக்கும்.



"எந்த வரி சேமிப்பு திட்டத்திலும் நான் வரிவிலக்கை மட்டும் எதிர்பார்ப்பதில்லை.

அதனால்தான் நான் யூனிட் இணைந்த ஆயுள் இன்சூரன்ஸ் திட்டத்தில் சேர்ந்தேன். (ULIP)

நான் ஒரு வருடத்தில் செலுத்தும் தொகை ரூ. 3000. அதற்கு வருமான வரி சட்டம் செக்ஷன் 80C பிரிவின் படி முழு வரிவிலக்கு உண்டு.

என் இலக்குத் தொகை ரூ 30,000 ஆக இருந்தால்கூட திட்டத்தின் முடிவில் எனக்கு குறைந்த பட்சம் ரூ. 50,000 கிடைக்கும்.

விதிவசத்தால் ஏதேனும் விபத்தில் நான் இன்றே இறக்க நேரிட்டால் என் குடும்பத்திற்கு ULIP ரூ 45,000 தரும். நான் செலுத்திய தொகை இதுவரை ரூ. 6000 ஆக இருந்தால் கூட! ஏன் என்றால் ULIP விபத்து மற்றும் ஆயுள் காப்பீடு இரண்டும் இணைந்த திட்டம்.

சொல்லுங்களேன்! வேறு எந்த முதலீட்டுத் திட்டம் இத்தனை நன்மைகள் அடங்கியது?

ULIPல் இன்னொரு நன்மை. ரூ. 3000 முதல் ரூ. 30,000 வரை எந்த இலக்குத் தொகையையும் நம் வசதிக்கு ஏற்றபடி தேர்ந்து எடுக்கலாம்.

என் குடும்பத்தின் நன்மை கருதி இந்த நல்ல திட்டத்தில் சேர்ந்தது எனக்கு மிகுந்த மனநிறைவை அளிக்கிறது. என் முதலீடு "யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா"வில் பாதுகாப்பாக இருக்கும் என்ற நம்பிக்கையும் கூட!

உங்கள் குடும்ப நன்மைக்கு இதைச் செய்வது மிகச் சுலபம். வாருங்கள்!

கனரா வங்கியின் கிளை, மற்றும் யூனிட் டிரஸ்டின் அங்கீகாரம் பெற்ற ஏஜண்ட் அல்லது தலைமைப் பிரதிநிதியை சந்தியுங்கள்."



திரு CPKN [illegible]

மேலும்!
திட்ட இறுதியில்
இலக்குத் தொகைக்கு போனஸ்!
5% பத்து வருட திட்டத்துக்கு.
7.5% பதினைந்து வருட திட்டத்துக்கு.



## யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா

(அரசு பொது உடைமை நிதி நிறுவனம்)
தலைமை அலுவலகம்— பம்பாய்-400 020.

பிராந்திய அலுவலகம்:
ரெஜினா மான்ஷன், 46, செகண்ட லேன் பீச்,
சென்னை 600 001, போன்-27433 24146

ஆந்திரப்பிரதேச அலுவலகம்:
27 11/6B, மேரி சாலை, கவர்னர்பேட்டை,
விஜயவாடா-520 002. போன்-63964

கேரளா அலுவலகம்:
XII/758, தேக்கமடம் சாலை,
திருச்சூர் 680 001. போன்-24690

தமிழ்நாட்டில் முக்கிய பிரதிநிதிகள்:

- சேலம். திரு N.K. இங்கர்சால், சேலம்-636 002 போன்-51520
- திருச்சி. திரு. M. ராமலிங்கம், திருச்சி-620 001 போன்-28280
- வட ஆற்காடு. திரு P. நாராயணன், வேலூர்-632 012 போன்-21575
- கோவை, பெரியார், நீலகிரி. திரு. A. தனபால், கோயம்புத்தூர்-641 018 போன்-34776
- மதுரை, ராமநாதபுரம். திரு M. ராமமூர்த்தி, மதுரை-625 002 போன்-அலுவலகம்-30160 வீடு 43179
- தஞ்சை. திரு K. முத்துசாமி, தஞ்சாவூர்-613 007 போன்-வீடு-1224

Sista's. UTI. 436.85 TM A

# ULIP-நேசப்பிணைப்பிற்கோர் நேர்த்தியான திட்டம்.

''வேண்டாம் சார்'' என்றான் மெதுவாய்.

நான் வற்புறுத்தவும் குடித்தான். டம்ளரைக் கீழே வைத்து நிமிர்ந்தவன் தெளிவாய் இருந்தான்.

''ம்..... இப்ப சொல் ஏன் அவன் காதைக் கடித்தாய்?'' என்றேன்.

மெல்ல என்னை நிமிர்ந்து நோக்கியவன் என் கண்களில் தோழமையைக் கண்டிருக்க வேண்டும்.

பேச ஆரம்பித்தான்.

''சார் எனக்கு அம்மா, அப்பா இல்லே. ஒரு தங்கை மட்டும்தான் பி.எஸ்ஸி படித்திருக்கிறாள். சென்ற மாதம் அவளைப் பெண் பார்க்க இந்த முத்துச்சாமி தன் வீட்டாருடன் வந்திருந்தான். எல்லோரும் பெண்ணைப் பிடித்திருக்கிறது, உடனே நிச்சயதார்த்தம் வைத்துக் கொள்வோம் என்றதால் தேங்காய்ப் பழம் மாற்றிக் கொண்டோம். மற்ற தாய்மார்களைப் போல அவன் தாய் 'லௌகீக' விஷயம் என 'லிஸ்ட்' ஏதும் படிக்காததில் நான் அவர்களைப் பெருமையாய் நினைத்திருந்தேன், அடுத்த இரண்டு நாட்கள்வரை. மூன்றும் நாள் மீண்டும் வந்தார்கள். அவன் தாய் தந்தையர் பேசாமல் இருக்க இவன், ''பாலு! அம்மா வரதட்சணை பத்தாயிரம் கேட்கிறார். நீ கல்யாணத்திற்குள் தயார் செய்துவிடு'' என்றான். அவன் தாய் தந்தையர் அமைதியாய்ப் பார்த்தனர். அவன் தாய் கண்களில் ஆச்சரியம் தெரிந்தது. எனினும் பிள்ளைக்கு எதிராய் அவர்கள் எதுவும் பேசவில்லே.''

''அடப்பாவி, வரதட்சணைக்கு இப்படி ஒரு ப்ளாக் மெயிலா, நிச்சயதார்த்தம் ஆயிட்டதாலே ஒண்ணும் செய்ய முடியாதுங்கிற எண்ணம். ம். அப்புறம்.''

''நிச்சயதார்த்தத்துக்கு பிறகு இதென்ன என நான் கேட்கவில்லே. என் நிலைமையைச் சொல்லி ஐயாயிரம் தருவதாய்ச் சொன்னேன். அவன் படியவில்லே. போயே விட்டான்.

''நானும் பிஎப் லோன் போட்டும், பக்கத்தில் கடன் வாங்கியும் எட்டாயிரம் ரூபாய் தான் சேர்ந்தது. என் ஒரே தங்கையின் மண வாழ்வு இரண்டாயிரம் ரூபாயில் தொங்கியது!

''அன்றிலிருந்துதான் நான் இந்த டிப்போவில் 'கிறுக்க'னானேன். என் ஒரே தங்கையின் திருமணம் நின்றுவிடக் கூடாதே என நான் இங்கு 'மெமோ' வாங்கிக் கொண்டிருக்கையில் நேற்றுவேறெங்கோ பெண் பார்த்திருப்பதாய் இவன் கடிதம் எழுதியிருக்கிறான்!

''இவனைப்பார்த்துப்பணம்சேர்த்துவிட்ட விஷயத்தைச் சொல்லி நிச்சயித்த தேதியில் திருமணம் நடத்தச் சொல்லவே இன்று இங்கு வந்தேன்.

''அன்று வரதட்சணைப் பணத்தைக் குறைத்துக் கொள்ளாத இவன் எனக்கு மெமோவை குறைத்துக் கொள்ளப் புத்தி சொன்னான். பொறுத்துக் கொண்டேன்.

'''தங்கச்சிக்குக் கல்யாாாாாணம் பண்ணப் போறீங்கள'ன்னு எகத்தாளமாச் சொன்னதாலே நான் சற்றுக் கோபமாய், 'என்னடா எகத்தாளமா?' என இவன் சட்டையைப் பிடித்தேன். (காலைப் பிடித்தேனும் கெஞ்ச வந்தவன்தான்) உடனே அவன் என் மூக்கில் குத்திவிட்டான். அதற்குள் எல்லோரும் ஓடி வந்து 'சண்டை விலக்குவதாய்' பேர் பண்ணிக் கொண்டு என் கைகளைப் பிடித்துக் கொண்டனர். எனக்கு மூக்கில் வலி தாளவில்லே. எனவே, எம்பி அவன் காதைக் கடித்தேன்'' என முடித்தான்.

''இதை ஏன் அங்கிருந்தவர் யாரும் சொல்லவில்லே?'' என்றேன்.

''அவுங்க யூனியனுக்கு அவன்தானே சார் துணைத் தலைவன்! அவங்க எப்படி சார் அவன் மேல் குத்தம் சொல்வாங்க?'' என்றான் வருத்தமாய்.

பிராஞ்ச மானேஜராய் இப்பொழுது என்னால் இவனுக்கு உதவ முடியாது. அவனது செயலுக்கான 'மெமோ' ரிப்போர்ட்டை என் கைகள் எழுத மனம் மனிதத்தனமாய்ச் சிந்தித்தது.

ரிப்போர்ட்டை மடித்துக் கவரில் போட்டுத் தலைமையகத்துக்கு அனுப்பிவிட்டு, ''இன்று மாலே உன் தங்கையைப் பெண் பார்க்க நான் வரலாமா?'' என்றேன் அவனை நோக்கி.

''சார்!'' என்று கண்களில் 'டியூப் லைட்' மின்ன என்னைப் பார்த்தான்.

''இன்றைக்கு உனக்கு லீவுதானே. நான் மாலே ஆறு மணிக்கு அம்மாவை அழைத்துக் கொண்டு உங்க வீட்டுக்கு வர்றேன்'' என்றேன்.

''சார்! அவனுக்கு ஏற்கெனவே நிச்சயம் செய்த பெண்.....'' என்று விழுங்கினான்.

''அவன் நிச்சயமற்றவனாய் இருக்கிறானே! உலகைப் பத்தி எனக்குக் கவலேயில்லே. (எடுத்துச் சொன்னால் அம்மா புரிந்து கொள்வாள்!) உனக்குச் சம்மதமா?'' என்றேன்.

கண்ணீருடன் என் கைகளைப் பற்றிக் கொண்டான். அவன் பார்வையில் நன்றி கலந்த பக்தி தெரிந்தது. தலேயசைத்தான் சம்மதமாய்.

மகிழ்ச்சியுடன் வெளியேறினான்! அவன் நடையில் கம்பீரம் இருந்தது.

இனி அவன் 'கிறுக்கன்' இல்லே!



ஒருவர்: ''சில்லறை கிடைக்கிறது ரொம்பக் கஷ்டமா இருக்குதுங்க.''

மற்றவர்: ''நோட்டுமாத்திரம் சுலபமா கிடைச்சுடறதா என்ன?''

— அ. சுந்தரம்.

# ராணுவ வீரர்களி
# 'புல்லெட்' சாகஸ











# ன்
# ம்!





கைதட்டி, கைதட்டிக் களைத்துப் பாகச் செய்துவிட்டது அந்த கழ்ச்சி! சென்னை, பரங்கிமலை, பாலோ' ஆட்ட மைதானம். கூட் ம் இரண்டாயிரம் மக்களுக்கும் திகம். ஆங்காங்கே மிலிட்டரி சுகங்கள்; அவர்கள் மனைவியர். த்தனை பேரையும் ' அவ்வளவு ரம் கவர்ந்த அந்த நிகழ்ச்சி ன்ன?

நம் ராணுவத்தின் 'ஸிக்னல்' ரிவு இந்த வருஷம் வைர விழா காண்டாடுகிறது. அதையொட்டி, இந்தியா முழுவதும் ஆறு குழுவினர் மாட்டார் சைக்கிள் பயணம் மேற் காண்டிருக்கிறார்கள்.' ராணுவத் ில் பயணுவது முழுக்க முழுக்க ன்ஃபீல்ட் புல்லெட்டுகளே! சென் னக்கு வந்த குழுவினர் மோட்டார் சக்கிள் சாகஸங்கள் செய்து ாட்டி அசத்தினார்கள். என்ஃபீல்ட் ல்லெட் இவர்கள் கையில், பொம ரேனியன் நாய்க்குட்டிபோல்சொல் றபடி கேட்டது!

—எஸ். சந்திரமௌலி.







# கிழக்கே ஓர் உலகம்



* ஹில்டன் ஹோட்டல்: ஓர் இரவு தங்க ரூ. 1200!

## 5. அலுப்பூட்டிய பயணமும் அல்லல்பட்ட கதையும்!

**பா**ங்காக்கிலிருந்து ஸிட்னிக்குச் செல்லும் பயணம் மிக நீண்ட அலுப்பூட்டும் பயணம். ஆனால் அதன் முடிவில் எனக்கு ஏற்பட்ட பரபரப்பும் தவிப்பும் இன்று நினைத்துப் பார்க்கையில் மிகவும் சுவாரஸ்யமானது. அதை விவரிக்குமுன்னர் பாங்காக் பற்றிக் கொசுருகச் சில ரசமான விஷயங்கள்:

**ச**னிக்கிழமை, விடுமுறை நாளானதால் காலையில் சீக்கிரமாகக் கிளம்பி பாங்காக்கிலிருந்து 33 கி. மீ. தள்ளி இருக்கும் பண்டைய நகரத்திற்குச் சென்றோம். உண்மையில் இது. 'பண்டை'யும் இல்லை. நகரமும் இல்லை. 200 ஏக்கரா நிலப்பரப்பில் நிர்மாணிக்கப்பட்டிருக்கும் ஒரு திறந்தவெளி மியூஸியம். புராதனக் கட்டடங்கள், கோவில்கள், வீடுகள், பண்டைக்கால வாழ்க்கை முறையைச் சித்திரிக்கும் குடிசைகள் எல்லாவற்றின் மாடல்களையும் இங்கு வெகு தத்ரூபமாக, அசல் அளவில் தயாரித்து வைத்திருக்கிறார்கள். வெகு துப்புரவாக வைத்திருக்கிறார்கள். தாய்லாந்தின் வரைபடத்தின் அமைப்பில் இந்த மியூஸியம் இருக்கிறது. ராமாயணக் காட்சிகளும், ஹிந்துக் கடவுள்களும் மிக அழகிய சிலை வடிவங்களில் கலா ரஸனையுடன் இயற்கை எழில் பின்னணியில் வைக்கப்பட்டிருக்கின்றன.

அங்கிருந்து திரும்பும்போது சுவான் சாட்டுச்சக் எனப்படும் வாரக் கடைசி மார்க்கெட்டுக்குச் சென்றோம். அநேக நாடுகளில் கூடும் வாராந்திரச் சந்தை போன்றதுதான். ஆனால் இது பிரும்மாண்டமானது. 35 ஏக்கர் விஸ்தீரணம். சுத்தமானது. வெகு சுவாரஸ்யமானதும் கூட. விலை கொள்ளை மலிவு என்பதால் எதுவும் தரம் குறைவானதாக இல்லை! கிடைக்காத பொருள்களும் கிடையாது. செல்லப் பிராணிகள் விற்கும் பகுதியில் எலிகளைக் கூட விற்றுக் கொண்டிருந்தார்கள்!

பாங்காக்கில் ரொட்டி மிக ருசியாக இருக்கிறது. தயாரான தேதியை உறை மீது அச்சிட்டு விடுகிறார்கள். நேற்றைய ரொட்டியைக் கூடப் புதுசு என்று பொய் சொல்லி விற்க முடியாது!

**இ**ரவு எட்டேகாலுக்கு விமானம் ஸிட்னியை அடைய வேண்டும். ஆனால் விமானம் போய்ச் சேர்ந்த போது மணி ஒன்பதரை.

இரண்டு ஆஸ்திரேலியர்கள் விமானத்துக்குள் நுழைந்தார்கள். இரண்டு கைகளிலும் இரண்டு ஸ்ப்ரேயர்களை மேல் நோக்கிய வண்ணம் ஏந்திக் கொண்டு இயந்திர கதியில் ஒரு தீவிரத்துடன் ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை நடந்தபடியே ஸ்ப்ரே செய்து விட்டு வெளியேறினார்கள். கிருமிநாசினியாம்! நல்லவேளை ஸ்ப்ரேயில் ஏதும் துர்நாற்றமில்லை. அயல்நாடுகளிலிருந்து வரும் விமானமும் பயணிகளும் ஆஸ்திரேலியாவுக்குள் கிருமிகள் எதையேனும் இறக்குமதி செய்து விடுவார்களோ என்று அத்தனை பயம்!

**அ**ன்று இரவு ஸிட்னியில் . தங்கி, மறுநாள் காலை பத்தரை மணிக்கு நான் வேறு விமானம் பிடித்து ஃபிஜியின் சர்வதேச விமான நிலையமான நாண்டிக்குச் செல்ல வேண்டும். இரவுத் தங்கலுக்கான ஏற்பாட்டைத் 'தாய் ஏர்வேஸ்' செய்யும் என்று என்னிடம் ICCR ம் அவர்களது பயண ஏஜெண்டும் தெரிவித்திருந்தார்கள். விமானத்தை விட்டு வெளியேறும் போது 'தாய் ஏர்வே'ஸின் ஒரு பெண் ஊழியரை இதைப் பற்றி விசாரித்தேன்.

"அதற்கான வவுச்சர் உங்களிடம் இருக்கிறதா?" என்றார்.

நான் திகைத்தேன். என்னிடம் இல்லை. யாரும் அதைப் பற்றி எனக்கு டில்லியில் தெரிவித்திருக்கவில்லை.

"இல்லையே! இரவு தங்க வேண்டியவர்களை விமான நிறுவனம் தக்கபடி கவனித்துக் கொள்ளும் என்று வாயால்தான் சொன்னார்கள்" என்றேன்.

"அதெப்படி? வவுச்சர் உங்கள் டிக்கெட்



டுடனேயே இணைக்கப்பட்டிருக்க வேண்டும். அப்பொழுதுதான் நாங்கள் தங்க வசதி செய்ய முடியும்" என்றாள் அவள்.

எனக்கு மகாக் கோபம் வந்தது. அப்பொழுதே இரவு கிட்டத்தட்ட பத்துமணி.

"இதோ பாருங்கள். டில்லி ஆபீஸ் தவறு செய்திருந்தால் நான் என்ன செய்ய முடியும்? இரவு வேளையில் நான் ஒண்டியாக எங்கே போவேன்?" என்றேன்.

அவள் ஒரு விநாடி யோசித்துவிட்டு, "நீங்கள் பாகேஜ் கிளியரென்ஸ் ஆனவுடன் என்னைத் 'தாய் கௌண்ட'ரில் வந்து பாருங்கள்" என்றாள். இப்போதைக்கு விடுபட்டால் போதும் என்ற எண்ணத்தில் அவள் கூறினாள் என்பது அப்புறம்தான் எனக்குத் தெரிய வந்தது!

சாமானை எடுத்தோமா, வெளியில் வந்தோமா என்கிற காரியமில்லை ஸிட்னியில். ஆஸ்திரேலிய கஸ்டம்ஸ்காரர்களிடம் காமா சோமா வேலையே இல்லை. ஒவ்வொரு பெட்டியையும் திறந்து பார்த்து, முகர்ந்து, கிளறி, நூறு கேள்விகள் கேட்டு —

அப்பொழுதுதான் கவனித்தேன். எனக்கு முன்னால் ஒரு இளம் வட இந்திய தம்பதிகள். ஏக சாமான்கள். பெட்டிகளின் மேல் கொட்டை எழுத்துக்களில் ஸுவா, ஃபீஜி என்று விலாசம் எழுதப்பட்டிருந்தது.

அந்தப் பெண் மிகவும் சோர்ந்து காணப்பட்டாள். "காய்ச்சல்" என்றாள். அவளுக்கு உருதுதான் பேச வந்தது. ஹிந்தி தெரியவில்லை. "காஷ்மீரத்திலிருந்து வருகிறோம்" என்றாள். அவளுடைய கணவரிடமிருந்து விவரங்கள் தெரிந்து கொண்டேன். அவர் ஒரு கதக் நடன ஆசிரியர். ICCR அவரை மூன்று வருஷ காண்ட்ராக்டில் ஃபீஜிக்கு அனுப்புவதாகச் சொன்னார். அரை ஃபர்லாங் நீளத்துக்கு அவருடைய பெட்டிகள் நகர்ந்ததன் காரணம் புரிந்தது. 200 கிலோ எடையளவு அவருக்கு அனுமதியாம்!

"நீங்கள் இரவு எங்கே தங்குவீர்கள்? ஏற்பாடாகிவிட்டதா? வவுச்சர் இருக்கிறதா?" என்றேன்.

"இருக்கிறது."

நான் என்னுடைய சங்கடத்தைச் சொன்னேன்.



* உபசாரமெல்லாம் விமானத்தோடு சரி. விமானத்தை விட்டு இறங்கினால் அலட்சியம்தான்!

வாஸந்தி

"நீங்கள் கவலையே படாதீர்கள். எங்களுடன் தங்கலாம். என்னுடன் ஹோட்டலுக்கு வந்துவிடுங்கள்" என்றார்.

கஸ்டம்ஸ்காரர்கள் அவருடைய அரை ஃபர்லாங்கு சாமான்களை ஒவ்வொன்றாகச் சோதனை போடுகையில், இவருக்காகக் காத்திருந்தால்விடிந்துவிடும் அந்தத் 'தாய் கௌண்டர்' காரி கிளம்பி விடுவாள் என்கிற பயத்தில் நான் இன்னொரு கஸ்டம்ஸ் கேட் வழியாக வெளியில் வந்தேன்.

ஈ காக்காய் இல்லை! எல்லா கௌண்டர்களும் மூடப்பட்டிருந்தன. பத்து மணிக்கு மூடி விடுவார்களாம். தாய் ஏர்வேஸ் காரியை மனதாரச் சபித்துக் கொண்டு திரும்பினேன். ஒரு வழியாகச் சாமான்களைக் 'கிளியர்' செய்து கொண்டு வெளியே வந்த அந்த முஸ்லிம் இளைஞர் என்னிடம் மிக உரிமையுடன் சொன்னார்: "நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? எனக்கு ஹில்டன் இன்டர்நேஷனல் ஹோட்டலில் புக் ஆகியிருக்கிறது. நீங்கள் எங்களுடன் வாருங்கள். ரூம் கிடைக்கும். உங்களுடைய டிராவல் ஏஜெண்டின் கவனக் குறைவினால் இது ஆகியிருப்பதால் பணம் திரும்பக் கிடைத்துவிடும். ரூம் கிடைக்காவிட்டால் எங்களுடன் தங்கலாம்."

அவருடைய கரிசனமும் தோழமையும்



• ஹில்டன் ஹோட்டலின் உணவு விடுதி: காலை உணவு ரூ. 90!

அந்தத்தருணத்தில் எனக்கு எத்தனை இதத்தை அளித்தது என்று விவரிக்க என்னிடம் வார்த்தைகள் இல்லை.

ஹில்டன் ஹோட்டலில் இரவு தங்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பயணிகளை ஏற்றிச் செல்ல ஏர்போர்ட் கோச் காத்திருந்தது. போகும் வழியில் அந்த இளைஞர் அஷ்கர் திர்மிஜி சொன்னார்:

''இவளுக்கு இந்தப் பயணமே அலுத்துவிட்டது. ஊருக்குத் திரும்பிவிடலாம் என்று அடம் பிடிக்கிறாள்!''

காய்ச்சலினால் அப்படியிருக்கும் என்று நான் நினைத்துக் கொண்டேன்.

''எங்களுக்குக் கல்யாணமாகி ஒரு வாரம் தான் ஆகிறது. வீட்டைவிட்டதோடு நாட்டையும் விட்டுக் கிளம்பினது அவளுக்குத் தாங்கவில்லை போலிருக்கிறது'' என்று அவர் தொடர்ந்தபோது நான் திகைத்துப் போனேன். ''எங்கள் அறையிலேயே நீங்களும் தங்கலாம்'' என்ற இவரது மனம் எவ்வளவு உயர்வானது!

ஹோட்டல் பிரும்மாண்டமாக இருந்தது. அந்தப் புது மணத் தம்பதிகளுடன் தங்குவது நியாயமில்லை என்ற முடிவோடு நான் ஹோட்டல் மானேஜரிடம் என் நிலைமையை விளக்கினேன். பதினைந்து நாட்கள் கழித்து ஆஸ்திரேலிய அரசின் விருந்தினளாக ஸிட்னியில் தங்கப் போகும் விவரங்களையும் காண்பித்தேன். என்னுடைய டிராவல் ஏஜெண்ட் செய்த தவறினால் வவுச்சர் விஷயம் விட்டுப் போயிற்று என்றேன்.

''வவுச்சர் இல்லாமல் அறையைக் கொடுப்பதற்கு எங்களுக்கு அதிகாரமில்லை. உங்களுக்காக நாங்கள் கன்ஸெஷனல் ரேட்டில் அறை தருகிறோம். வழக்கமான ரேட் $120 க்கு பதில் அறுபது அமெரிக்க டாலர்கள் கொடுத்தால் போதும்'' என்றார்.

நான் நன்றி கூறிப் பணத்தைக் கட்டிச் சாவியை வாங்கிக் கொண்டு அறையை அடைந்தேன்.

அமர்க்களமான சௌகர்யங்களைக் கொண்ட அறையிலும் இரவு முழுவதும் தூக்கம் வரவில்லை. வெளிநாட்டுப் பயணத்தின்போது கையைவிட்டு எதிர்பாராத விதத்தில் அந்நியச் செலாவணி கரைந்து போவதைப்போல ஓர் அவஸ்தைவேறொன்றுமில்லை. அதுவும் ஒன்றிரண்டு டாலர் இல்லை. முழுசாக அறுபது! ஓர் இரவு அறை வாடகை அறு நூறு ரூபாய்க்கு அதிகம்! எனக்குச் சலுகை காட்டப்பட்டிருந்தது என்றாலும் அதுவே நமக்கு மிக அதிகமாய்த்தானே இருக்கிறது! நம் நாட்டில் நம் கையில் காசில்லாவிட்டாலும், நாம் மன்னர்கள். அந்நிய மண்ணில் கைக் காசு குறைந்து போனால் நிச்சயமாய்ப் பரதேசிகள்.

எனக்குள் சமாதானப்படுத்திக் கொள்ள முடியாத ஒரு ஆத்திரம் ICCR ரின் பயண ஏஜெண்டின் மேல் ஏற்பட்டது. எத்தனை கவனக்குறைவும் அலட்சியமும் இருக்க வேண்டும், இப்படி ஒரு பயணியை, தனியாகச் செல்லும் பெண் பயணியை அலைக்கழிக்க வைப்பதற்கு.

இரவு தூக்கமின்றிச் சென்றது. விடிந்ததும் எழுந்து அறைக்குள்ளேயே இருந்த உபகரணங்களைக் கொண்டு காப்பி தயாரித்து அருந்தினேன். அறையில் இருந்த குறிப்பின்படி ப்ரேக் ஃபாஸ்ட்டுக்குத் தனியாக ஒன்பது டாலர் என்று போட்டிருந்ததைப் பார்த்து, காலை உணவு வேண்டியதில்லை என்று தீர்மானித்தேன்.

காலை அஷ்கரின் மனைவி சற்று கலகலப்பாக இருந்தாள். ஜுரம் குறைந்திருப்பதாகச் சொன்னாள். நீங்களும் எங்கள் அறையில் தங்கியிருக்கலாமே என்றாள். நான் புன்னகைத்தேன்.

விமான நிலையத்தை அடைந்ததும் அங்கு தமிழரைப் போலத் தென்பட்ட ஒருவரிடம் பேச்சுக் கொடுத்தேன். நாண்டிக்குப் போவதாகச் சொன்னார். என்னைப் பற்றித் தெரிவித்ததும் அவர் வியப்புடன் முகம் மலர்ந்து, ''நீங்கள்தானா அந்தத் தமிழ் எழுத்தாளர்? என்பெயர் கிருஷ்ணமூர்த்தி. ஃபீஜி இந்தியன். உங்களை ஃபீஜிக்கு அழைத்திருக்கும் அமைப்பின் அங்கத்தினன். உங்களுக்கு ஃபீஜியில் பெரிய வரவேற்பு காத்திருக்கிறது'' என்றார் சுத்தமான ஆங்கிலத்தில்.

என்னுடைய காலி வயிற்றில் பால் வார்த்தாற்போல் இருந்தது!

(தொடரும்)

# குட்டிக்கரணக் கொள்கைகள்

"திருக்குறளைத் தேசிய நூலாக்க வேண்டும் என்று திருவள்ளுவர் திருநாளில் அமைச்சர்கள் முழங்கினார்கள். நல்ல யோசனை தான். ஆனால் 'கள்ளுண்ணாமை' என்ற 93 வது அதிகாரத்தைக் கடைப்பிடிக்க மக்களுக்கு உதவாமல், சாராயக் கள்ளுக்கடைகளைப் பெருக்கி, லட்சக்கணக்கான குடிகளைக் கெடுத்து வரும் அரசுக்குத் திருக்குறளைத் தேசிய நூலாக்க வேண்டும் என்று சிபாரிசு செய்யும் தகுதி ஏது? ஒரு தலைமுறை இளைஞர்களை நன்றாக மதுவுக்கு அடிமையாக்கி விட்டு, இப்போது 87, ஜனவரி முதல் கள், சாராய விற்பனைக்குத் தடை விதிக்கப் போவதாகமறுபடி நெடுஞ்செழியன் அறிவித்திருக்கிறார். இது நடக்கப் போகிறதா, அல்லது ஏற்கெனவே பலமுறை செய்த அறிவிப்புகள் போல இதுவும் காற்றில் பறக்க விடப்படுமா என்பது ஒருபுறமிருக்க, இது போன்ற குட்டிக்கரணக் கொள்கைகள் நாட்டுக்கு நல்லதல்ல.

— வ. நம்பி, சென்னை — 40.

## தாய்மொழி பயில முடியவில்லையே!

பம்பாயில் பள்ளியில் படிக்கும் என் பிள்ளைகள் ஆங்கிலம், இந்தி, மராத்தி மொழிகளைக் கட்டாயப் பாடமாகப் படிக்கிறார்கள். மூன்று மொழிகளிலும் நல்ல தேர்ச்சி. ஆனால் தாய்மொழியான தமிழை வீட்டில் பேச மட்டும்தான் பழக்கம். எழுதவோ படிக்கவோ முடியாது. வீட்டில் நாம் அவர்களுக்குத் தமிழ் மொழியைப் போதிக்கலாம் என்றால் அதுவும் பிரச்னைதான். காரணம், அவர்களுக்கு 'ஹோம் ஒர்க்' என்ற பெயரில் வண்டி வண்டியாகத் தரப்படும் பாடங்களையே படிக்க நேரமில்லை. தமிழ், தாய்மொழி என்று பீற்றிக் கொள்ள முடிவதோடு சரி.

ஒரு டிராயிங் மாஸ்டர் — மராத்தி மொழிக்காரர் — தம் பெயரைக் கஷ்டப்பட்டுத் தமிழில் எழுதி, "இதைப் படி" என்று பெருமையுடன் என் மகனிடத்தில் சொல்லியிருக்கிறார். அவனோ திருதிருவென்று விழித்திருக்கிறான். "உன் தாய்மொழியை உனக்குப் படிக்க முடியாதா?" என்று ஆச்சரியப்பட்டிருக்கிறார் டிராயிங் மாஸ்டர்.

குழந்தைகளுக்குத் தமிழைச் சொல்லித் தர முடியவில்லையே என்கிற குற்ற உணர்வு என்னை ஆட்டிப் படைக்கிறது! என்னைப் போல பம்பாயில் பலர்.

— காமாட்சி சந்திரசேகர், பம்பாய் — 71.

## தாமதத்துக்கு வருந்தினால் போதுமா?

எனது மைத்துனர் டாக்டர் ராமசுப்பிரமணியம் நியூயார்க்கிலிருந்து தந்தி மணியார்டராக கேபிள் வழியாக எனக்கு 200 டாலர் பணம் ஜனவரி 2ம் தேதி அனுப்பி வைத்தார். அந்தப் பணம் 17ந்தேதி வரை வராமல் 17, 18, 20 தேதிகளில் ஸ்டேட் பாங்க் ஓவர்ஸீஸ் பிராஞ்சில் விசாரித்ததற்கு, "வரவில்லை" யென்று சொல்லிவிட்டார்கள். பின்பு எனக்கு 22 ஆம் தேதி இந்த பாங்கிலிருந்து 8 ஆம் தேதியிட்ட கடிதமும், பணமும் வருகிறது! தபால் என்றைக்கு ரிஜிஸ்டர் செய்யப்பட்டுள்ளது என்று கவரைப் பார்த்தால், 21 ஆம் தேதி என்று அஞ்சல் முத்திரை இருக்கிறது! அவசரம் என்பதால் கேபிள் மூலம் பணத்தை அனுப்பிய செலவு விரயம்.

சென்ற வருடமும் இதே மாதிரி கேபிள் மூலம் அனுப்பிய பணத்தை நான் பல கடிதங்கள் எழுதியபின் மூன்று மாதங்கள் கழித்துப் பட்டுவாடா செய்தார்கள்!

இந்தக் காலதாமதம் குறித்து நான் ஸ்டேட் பாங்கின் மேலதிகாரிகளுக்கு எழுதியதற்குக் கிடைத்த பதில்: "அசௌகரியம் ஏற்பட்டதற்கு வருந்துகிறோம்!"

— ப. பழநி வேலாயுதம், சென்னை — 10.

## நிரம்பி வழியும் தபால் பெட்டிகள்!

பொங்கலுக்கு மறுநாள் காலை 11 மணிக்குத் தாராபுரத்தில் பொங்கல் வாழ்த்துக்கு நன்றி கூறும் கடிதத்தைப் பெட்டியில் போடுவதற்குச் சென்ற போது திடுக்கிட்டேன். தபால் பெட்டி நிரம்பி வழிந்தது. அருகில் ஒருவர் நின்று கொண்டு ஒவ்வொரு பொங்கல் வாழ்த்தையும் உருவி ஸ்டாம்பை மட்டும் பிய்த்து எடுத்துக் கொண்டு வாழ்த்தை மறுபடி பெட்டியினுள் திணித்துக் கொண்டிருந்தார். நான் போட இருந்த கடிதத்தைத் தலைமைத் தபால் நிலையத்தில் போடலாம் என்று அங்கு சென்று பார்த்தால் அங்கும் பொங்கல் வாழ்த்துக்கள் பெட்டி நிறைய இருக்கின்றன! பொங்கல் சமயத்தில் நிறையக் கடிதப் போக்குவரவு இருக்கும் என்றுதான் தெரிகிறதே; அப்போது தற்காலிகமாகவாவது அடிக்கடி தபாலை எடுக்கும் முறையை அமுல் செய்யலாமே! ஸ்டாம்ப் இல்லாத வாழ்த்தை இரட்டை சார்ஜ் கட்டிப் பெறுபவர்கள் நிலையை எண்ணிப் பாருங்கள்! இந்த வாழ்த்து வந்திருக்கவே வேண்டாமே என்றுதானே தோன்றும்?

— சூரிய நிலா, ஈரோடு — 16.

சாதவாகனனைச் சிறை செய்யத் தான் உத்தரவிட்டதைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் வீரர்கள் பதுமைகள் போல் நின்றுவிட்டதையும், தனது உத்தரவில்லாமல் வீரர்கள் இயங்க மாட்டார்களென்று கூறிக்கொண்டு காஷ்டானன் வெளியே வந்ததையும், தன்னைச் சிறை செய்யப் போவதாக அந்தக் கோழை சொல்லித் தனது வாளைக் கொடுத்துவிடும்படி கேட்டதையும் பார்த்த மகாக்ஷத்ரபனான நாகபாணன், அதிர்ச்சியை விட வியப்பை அதிகமாக அடைந்ததால், தன்னைக் கண்டாலே நடுங்கி வந்த காஷ்டானனுக்கு அத்தனை துணிவு எப்படி வந்தது என்பதைக் கேட்டதற்கு, சாதவாகனன் சொன்ன பதில் மிகவும் பொருத்தமாயிருந்ததைப் புரிந்துகொண்டான். கௌதமிபுத்திரனிடம் இருப்பதுதான் அந்தத் துணிவு வந்ததற்குக் காரணம் என்பதை உணர்ந்துகொண்ட நாகபாணன் வாளைக் கொடுக்கும்படி இரண்டாவது முறை காஷ்டானன் கைநீட்டியதும் பெரிதாக நகைத்தான். காஷ்டானன் அழைத்து வந்துள்ள இருபது பேரைவிடப் பன்மடங்கு அதிகமான வீரர்கள் புதிய மரக்கலங்களிலிருந்து வந்து காட்டுக்குள் பதுங்கியிருக்கிறார்களென்ற நினைப்பால், "காஷ்டானா! சிறைப்படப் போவது நானல்ல. நீயும் இந்தச் சாதவாகனனுந்தான்" என்று கூறித் தனது ஒரு கையைத் தலைக்கு மேலே தூக்கி ஆட்டினான். தனது மடியிலிருந்து ஒரு சங்கை எடுத்துப் பலமாக ஊதவும் செய்தான்.

அவன் செய்கை எதையும் தடை செய்யாத கௌதமிபுத்திரன், "மகாக்ஷத்ரபரே! இந்தச் செய்கை எதுவும் பயனளிக்காது. உமது வாளைக் காஷ்டானனிடம் கொடுத்துவிடுவது நல்லது" என்று சர்வ சாதாரணமாக

சாண்டில்யன்



# சித்தரஞ்சனி

உபதேசம் செய்தான்.

நாகபாணன் தனது எதிரியை வியப்பு ததும்பிய கண்களால் நோக்கி, ''ஏன் பயனளிக்காது? மூன்று மரக்கலங்களிலும் வந்த வீரர்களில்ஒருபகுதியினர்காட்டுக்குள் ஒளிந்திருக்கிறார்கள். எதற்கும், எந்த விநாடியிலும் செயல்பட அவர்களுக்குச் சைகையும் செய்யப்பட்டிருக்கிறது'' என்று அவன் சுட்டிக்காட்டுவதற்கும், காட்டிலிருந்து வீரர்கள் பலர் விரைந்து வருவதற்கும் சமயம் சரியாயிருக்கவே, ''பார்த்தாயா கௌதமி புத்திரா! எந்த ஏற்பாட்டுக்கும் ஓர் எதிர் ஏற்பாடு உண்டு. அதுவும் நாகபாணன் புத்தி சற்று எச்சரிக்கையாக எதையும் முன் கூட்டியே சிந்திக்க வல்லது'' என்று சற்றுப் பெருமிதத்துடன் கூறினான். ''அதோ வரும் வீரர்களின் தலைவனிடம் உன் வாளைக் கொடுத்துவிடு. இந்தப்பைத்தியம்காஷ்டானனையும் அடங்கி நடக்கச் சொல். உங்களிருவரையும் கோட்டையில் விசாரிக்கிறேன்.'' என்றும் சொன்னான்.

நாகபாணனின் வீராப்புக்குக் கௌதமி புத்திரன் பதிலேதும் சொல்லவில்லை. ''நாகபாணரே! உமது விருப்பம்போல் செய்கிறேன். ஆனால் நீர் தப்புக் கணக்குப் போடுகிறீர். வரப்போவது தலைவனல்ல...'' என்று இழுத்தான்.

''வேறு யார்?'' சினத்துடன் எழுந்தது நாகபாணனின் கேள்வி.

''தலைவி'' என்றான்சாதவாகனவாலிபன்.

அடுத்து நாகபாணன் பேசவில்லை. விரைந்துவந்தவீரர்களை அடுத்துசித்தரஞ்சனி பெரியதொரு புரவியில் வேகமாக வருவதையும், அவன் கையில் நீண்ட வாளொன்று இருப்பதையும் பார்த்துப் பிரமை பிடித்து நின்ற மகாக்ஷத்ரபன் ''யார்! சித்தரஞ்சனியா?'' என்று வினவினான் பிரமிப்பு குரலிலும் விரிய.

அவன் கேள்வியைத் தொடுத்து முடிக்கு முன்பாகப் புரவியை அவன் எதிரே நிறுத்தித் தரையில் குதித்த சித்தரஞ்சனி, எதிரே நின்ற மூவரையும் மாறி மாறிப் பார்த்தான். கடைசியில் காஷ்டானனை நோக்கி, ''எதற்காகச் சங்கை ஊதி என்னை அழைத்தீர்கள்? நாகபாணர் ஒருவரைச் சிறை செய்ய உங்களால் முடியாதா?'' என்று சீற்றத்துடன் கேட்டான்.

''படைத்தலைவர் மீது கோபித்துப் பயனில்லை சித்தரஞ்சனி. சங்கை ஊதி உன்னை அழைத்தவர் நாகபாணர்'' என்ற கௌதமி புத்திரன், ''மகாக்ஷத்ரபர் உன்னிடந்தான் வாளைக் கொடுப்பேனென்று பிடிவாதம் செய்கிறார். அதற்காகத்தான் சங்கை ஊதி உன்னை வரவழைத்தார். வாளை வாங்கிக் கொள்'' என்றான். மரியாதைக்கு அறிகுறியாக நாகபாணனை நோக்கித் தலையையும் தாழ்த்தினான்.

நாகபாணன் புத்தியில் நடந்த விஷயம் மிகத் தெளிவாக விளங்கலாயிற்று. தங்கள் சங்கைப் போலவே கௌதமி புத்திரன் தனதுபடைத்தலைவர்களுக்கும் சங்குகளைக் கொடுத்திருக்கிறானென்றும், தனது படையைத் தான் அழைக்கும்போதெல்லாம் எதிரிப்படை வருகிறதென்றும் புரிந்து கொண்டதால் உடனடியாக ஏற்படும் எந்தச் சண்டையிலும் குழப்பம் ஏற்படுமென்பதை உணர்ந்து கொண்டான். ஆனால் இத்தனை ஆபத்திலும் அவன் சிறிதும் கலங்காமல் தனது வாளை எடுத்து, ''சித்தரஞ்சனி! இந்தா வாளைப் பெற்றுக் கொள்'' என்று கூறித் தனது வாளை உறையிலிருந்து எடுத்து நீட்டினான். அவன் கையில் வாளைப் பெற்றுக் கொண்ட பிறகும் மிக நிதானமாகவே நின்றான். ''அடுத்து என்ன சாதவாகனா!'' என்று வினவினான் கௌதமிபுத்திரனை நோக்கி.

''நாகபாணா! வீரனான உன்னைக் கொல்லவோ, சிறையில் அடைத்துச் சித்திரவதை செய்யவோ எனக்கு மனம் இடங்கொடுக்கவில்லை. சித்திரவதை செய்வது எங்கள் தர்மமும் அல்ல. உனது படைகளை அழைத்துக் கொண்டு இந்தப் பகுதியிலிருந்து இரண்டு நாட்களில் நீ போய்விடுவதாகப் பிரமாணம் செய்தால் நீ இப்பொழுதே செல்லலாம். இல்லையேல் உன்னைச் சிறைசெய்து அழைத்துப் போவதைத் தவிர வேறு வழியில்லை'' என்று சாதவாகனன் கூறினான்.

நதிக்கரையில் படகின் அருகிலிருந்தே இந்த உரையாடல் நடந்து கொண்டிருந்தாலும், விடியும் நேரமும் மெதுவாக நெருங்கிக் கொண்டிருந்ததால் சந்திர வெளிச்சமும் மிகவும் மங்கிவிட்டதாலும் நதியின் முகத்துவாரத்தில் புகுந்த கடலலைகள் மெதுவாக அடங்கத் தொடங்கியிருந்தன. நதியின் அலைகளும் மிக மந்தமாயிருந்தன. எங்கும் பக்ஷி ஜாலங்கள் உதயகால ராகத்தைப் பலபடி ஒலிக்கத் தொடங்கின. அந்தக் கீதங்களைச் சித்தரஞ்சனி அனுபவித்துக் கொண்டிருந்த சமயத்தில் நாகபாணன் சரேலென்று திரும்பிக் கரையிலிருந்து நதியில் வேகமாகக் குதித்துவிட்டான். நதிக்கரையை நோக்கி ஓடிய காஷ்டானனையும் மற்ற வீரர்களையும் தடுத்த கௌதமிபுத்திரன், ''நாக

பாணன் தப்பிச் செல்லட்டும்'' என்ருன்.

''ஏன்?'' காஷ்டானன் குரல் சினத்துடன் ஒலித்தது.

''அவனிடம் வாளில்லை. நிராயுத பாணியை வேட்டையாடுவது தர்மமல்ல'' என்ருன் கௌதமிபுத்திரன்.

''இந்தத் தர்மத்தை நாகபாணன் பார்க்க மாட்டான்'' என்ருன் காஷ்டானன்.

''நாகபாணன் தர்மமல்ல நமது தர்மம். தவிர இனி உடனடியாகப் போர் ஏற்படும். அதற்கு நம்மைச் சித்தம் செய்து கொள்வது நல்லது'' என்று கூறிக் கொண்டே திரும்பி ஆற்றுப் பகுதியைக் கவனித்தான்.

ஆற்றின் கோட்டைப் பகுதியிலிருந்து சுமார் நாற்பது படகுகள் முகத்துவாரத்தை நோக்கி விரைந்து வந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு படகிலும் பத்து வீரர்களுக்குக் குறையாமல் இருந்ததையும், அவர்கள் பூரண ஆயுதங்களை ஏந்தியிருந்ததையும் கௌதமி புத்திரன் கவனித்தான். அதே சமயத்தில் நாகபாணனின் மரக்கலத்திலிருந்தும் வீரர் களைத் தாங்கிய படகுகள் கரையை நோக்கி வரத் தொடங்கின. கௌதமிபுத்திரன் புதிதாக உருவாகிய அந்தச் சூழ்நிலையைக் கவனித்து, ''நாகபாணன் போருக்குச் சன்னத்த மாகிவிட்டான். சித்தரஞ்சனி! நாகபாணன் வாளை என்னிடம் கொடுத்துவிடு. நீ உன் வீரர்களுடன் தாபிலேசுவரர் கோவிலுக்குப் போய்விடு. காஷ்டானனு! உன் வீரர்களில் நான்கு பேர் மட்டும் என்னுடன் இங்கு இருக்கட்டும். நீ சண்டிகாதேவி ஆலயத்துக் கருகில் நமது புரவிப் படையுடன் காத்திரு. நான் அழைக்கும்போது வேகமாகப் புரவிகளைச் சரிவில் செலுத்தி வா'' என்று உத்தரவிட்டான். சித்தரஞ்சனியின் கையிலிருந்த நாகபாணனின் வாளைத் தனது இடது கையில் வாங்கிப் பிடித்துக் கொண்டான். வலது கையில் தனது வாளை ஏந்தி இரண்டு கைகளிலும் வாட்களுடன் எதிரிகளை எதிர் பார்த்து நின்ருன்.

அவனைத் தனியே விட்டுச் செல்ல மனமில்லாத சித்தரஞ்சனி சிறிது தாமதித்தாள். ''பத்து

---

நீ ஒருவனுக்கு ஒரு மீனைக் கொடுத்தால் அவனுக்கு ஒரு வேளை உணவை அளிக்கிருய். மீன் பிடிப்பது எப்படி என்பதைக் கற்றுத் தந்தால், ஆயுள் முழுவதும் அவனுக்கு உணவைத் தருகிருய்.

சொன்னவர்: சீன அறிஞர் கவான் த்ச.

— தசி. பாலு.



வீரர்களைக் கொண்டு நாகபாணனைச் சமாளிக்க உங்களால் முடியுமா?'' என்று கவலையுடன் கேட்டாள்.

''இந்தப் பத்து வீரர்கள் கூடத் தேவையில்லை. நீ போ சித்தரஞ்சனி! நான் சில நாழிகைகளில் திரும்பிவிடுவேன்'' என்று கூறினுன் கௌதமிபுத்திரன்.

இருப்பினும் கவலையுடன் நின்ருள் சித்தரஞ்சனி. ''நீ போ சித்தரஞ்சனி! இப்பொழுது எந்த ஆபத்துமில்லை. சண்டை இன்று பிற்பகலுக்கு மேல்தான் துவங்கும். அதோ பார்,'' என்று நதியைச் சுட்டிக்காட்டினுன்.

கோட்டையிலிருந்து வந்த படகுகள் திடீரெனத் திரும்பிக் கோட்டையை நோக்கிச் சென்றன. நாகபாணன் கப்பலிலிருந்து வந்த படகுகள் முகத்துவாரத்தை நோக்கி வராமல் கடலின் கரையை நோக்கி வடக்குத் திசையில் சென்றன. நாகபாணன் இருந்த இடம் தெரியவில்லை. கரையில் நின்றவண்ணம் ஆற்றுப் பகுதியை உற்றுநோக்கிக் கொண்டிருந்த கௌதமிபுத்திரன் திடீரென மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டான். இக்கரையிலிருந்து பாதி தூரத்தில் திடீரென நாகபாணனின் உடல் நீர்மட்டத்துக்கு மேல்எழுந்துமீண்டும்சுழன்றுநீரில்மூழ்கியது. அடுத்து பெரும் சுருமீன் ஒன்று மேலெழுந்தது. அதன் வாய் முழுவதும் ரத்தமாயிருந்தது. அடுத்து அதுவும் நீரில் அமிழ்ந்து மறைந்தது. நீரின் மேற்பகுதியில் குருதி குமிழியிட்டு வந்து கொண்டிருந்தது. அருணோதயத்தின் சிவந்த கதிர்கள் அந்தக் குருதிக்குத் தனி மெருகைக் கொடுத்தன. கௌதமி புத்திரன் பிரமை பிடித்துத் தலைகுனிந்து கரையிலேயே நின்ருன். பின்னல் வந்த சித்தரஞ்சனி அவனது தோளின் மீது ஆதரவாகக் கையை வைத்தது கூட அவனுக்கு எந்தவித உணர்ச்சியையும் அளிக்கவில்லை. ''நாகபாணனைப் போரிட்டு முடிக்க வந்தேன். என்னை அவன் ஏமாற்றிவிட்டான்'' என்று முணுமுணுத்த கௌதமிபுத்திரன் துன்பப் பெருமூச்சு விட்டான்.

சித்தரஞ்சனி இருமுறை அவனை அழைத்தும் அவன் பதில் ஏதும் சொல்லவில்லை. நாகபாணனின் துர்மரணத்தைக் கேட்டால், வீரமாதாவான தனது தாய் என்ன நினைப்பாள் என்று எண்ணி உள்ளூரப் பொருமினுன். இந்த உணர்ச்சி வெள்ளத்தில் சூழ்நிலையை அறவே மறந்தான். அவன் எண்ணமெல்லாம் பிரதிஷ்டானுவிலிருந்த கௌதமி பாலஸ்ரீயை வட்டமிட்டுக் கொண்டிருந்தன. ''மகனே! உன்னைப் போரில் வெற்றிவாகை சூடிய வீரனுக எதிர்பார்த்தேன். சந்தர்ப்பத்தால் வெற்றி கிட்டிய சாதாரண மனிதனுக உன்னை எதிர்பார்க்கவில்லை'' என்று பாலஸ்ரீ தன்னை நோக்கிக் குற்றம் சாட்டுவதாகத் தோன்றியது சாதவாகனனுக்கு. இதனல் தளர்ந்த மனத்துடன் மலையேறத் திரும்பியவன் செயலற்று நின்றுவிட்டான். அவன் நிலைமை தலைகீழாக மாறியிருந்தது.

(தொடரும்)

ஸ்ரீரஸ்து சுபமஸ்து. ஸ்ரீ வெங்கடேச ப்ரஸன்ன:—

ஜெகத்குரு ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் ஆசியுடன் நானது 21.2.86 ல் சென்னை சென்ட்ரலில் இருந்து III-டயர் ஸ்லீப்பர் ரயில் பெட்டியில் புறப்படும் 25 நாட்கள் கொண்ட மஹா சிவராத்திரி, காசி, நேபாளம், யாத்திரையில் மொத்தம் 70 பெர்த்களுக்கு இன்னும் 15 பெர்த்துகள் மட்டுமே காலியாக உள்ளது.

பண்டரீபுரம், பம்பாய், நர்மதா நதி (இடார்ஸி) பிரயாகை அயோத்யா,. ஸ்ரீகாசி, (மஹாசிவ ராத்திரி சமயம்) நேபாளத் தலைநகர் காட்மண்டு, கயா, புத்தகயா, கல்கத்தா, பூரி, சிம்மாசலம் முதலிய க்ஷேத்திரங்கள்:—

3 காப்பி, இரண்டு வேளை போஜனம் அல்லது இரவில் பலஹாரம், காலை டிபன், ஒரு பை, ரயில் சார்ஜுகள், ஸ்லீப்பர் பெர்த் சார்ஜுகள் உட்பட நபர் 1க்கு ரூபாய் 2200/—.

ஊர் சுற்றிப் பார்க்கும் பஸ், ரிக்ஷா முதலிய செலவுகள் தனி: எல்லா க்ஷேத்ரங்களையும் ஏற்கெனவே தரிசித்தவர்கள் நேபாளம் மட்டும் பார்க்க வேண்டுமானால் காசியில் வந்து சேர்ந்துக் கொண்டு நேபாளம், தரிசிக்கலாம்.

யாத்திரையில் கலந்துக் கொள்ள ஆர்வம் உள்ளவர்கள் விவரம் கேட்டுத் தெரிந்துக் கொள்ள லாம்.

வைதிக கர்மாக்கள் செய்ய, காசி, கயாவில் போதுமான நாட்கள் ஒதுக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்,
21, அய்யாபிள்ளை தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை—600 005. டெலிபோன்: 84 1957.

ஸ்ரீமதி நீலா சுப்ரமணியம்,
C/o. K. A. S. மணி, G. 4 29, R. B. I. Quarters.
M. M. Marg. Bombay-4 00 008.
டெலிபோன்: 891522.

ஸ்ரீ P. L. கிருஷ்ணமூர்த்தி,
53, அம்மன் சன்னதி, செங்கோட்டை — 627 809.

## ஆழ்நிலைத் தியானம்

## TRANSCENDENTAL MEDITATION



கல்வித் துறையில் மாற்றம் ஏற்பட 2000 க்கும் மேற்பட்ட பள்ளிக் கூடங்களில் பயிற்சி செய்கின்ற — பல பல்கலைக்கழகங்கள் ஆய்ந்துவெளியிட்டசான்றுகளைக்கொண்ட இத்தியானம்மாணவர் களுக்கு ஒரு சிறந்த மனப் பயிற்சியாகும். இதனால் ஆளுமைத் திறன், (பர்சனலிட்டி) கற்கும் திறன், நினைவாற்றல், மன ஒருமைப்பாடு, சிந்தனை அலைகளில் ஒழுங்குத் தன்மை அதிகரிக் கின்றது. இதனை ஒரு "சிகிச்சை முறை" என்று மேலை நாட்டு டாக்டர்களும், இந்திய டாக்டர்களும் கூறுகின்றார்கள். பெண்கள் வாழ்க்கைப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண முடிகின்றது. ஒன்பது வயதிலிருந்து எல்லா வயதினரும் எம்மதத்தினரும் கற்றுக் கொள்ளலாம். சனிக்கிழமை தோறும் மாலை 6 மணிக்குத் தமிழிலும் ஆங்கிலத்திலும் புதிய வகுப்புகள் நடைபெறும். ஆசனம், மேல்நிலைப் பயிற்சியான சித்திப் பயிற்சிகளும் கற்றுத் தரப்படும்.'

இடம்:

மகரிஷி இயற்கை நியதிக் கல்லூரி,
28, டாக்டர் குருசாமி சாலை,
சேத்துப்பட்டு, சென்னை—600 031.
போன்: 665842.

கிளைகள்:

திருத்தணி: 14, கே. சி. செட்டி தெரு.

திருச்சி: 87 — 19, 4 வது கிராஸ் தெரு, தில்லை நகர் மேற்கு.

கோவை: 33, மேற்கு வெங்கடசாமி ரோடு, ஆர். எஸ். புரம்.

ஈரோடு: 61 ஏ, எஸ். கே. சி. தெரு.

நாகர்கோவில்: 3, பெருமான் தெரு, இராமவர்மபுரம்.

# வேடிக்கைக் கவிதை



### வேலை கிடைத்துவிட்டது!

அப்பாடா!
ஐந்நூறு ரூபாய்
அன்பளிப்பு தந்து
அட்டண்டர் வேலையில்
சேர்ந்து.விட்டேன்:
லஞ்ச ஒழிப்பு
இலாக்காவில்.

— ஜே. விக்டர் செல்வகுமார்,
சென்னை — 16.

### அவசர ஆணை!

மத்திய மந்திரி வருகை!
எல்லாம் பளிச்னு இருக்கணும்!
உத்தரவையொட்டி
எங்களூர் எருமைகளுக்கு
வெள்ளையடிக்கப்பட்டன.

— டி. வி. ராஜன், நெய்வேலி—3.



### சுயநலமற்ற பிரார்த்தனை.

தேர்தலில்
வெற்றிபெற்றால்
'மொட்டை' யடிப்பேன்
என்றார்
அரசியல்வாதி!
பிறகுதான்
புரிந்தது,
அவர் குறிப்பிட்டது
தன்னை அல்ல
பொது மக்களை
என்று!

— ஆர். அரிகோபி, குடியாத்தம்.




### அவசரப்பட்டு விட்டாயடி!

என்
காதல் கடிதங்களை
உன் வீட்டுப் பக்கமுள்ள
பேப்பர் கடையில்
கிலோ 1.40 க்குப்
போட்டாயாமே...
அடிப்பாவி!
அவசரப்பட்டு விட்டாயடி
நீ!
என் வீட்டுப் பக்கம்
கிலோ 1.60!

— நடேஷ்ஷா, சென்னை—94.

[redacted]

## இந்தியாவே காணாமல் போகும்!

''ஆனையை எலி தூக்கிச் செல்லும்''
அசையாத நம் நம்பிக்கை.
அதனால்தான்
ஆனைகள் கூடக் காணாமல் போகின்றன
நம் அரசாங்கத்தில்!
இன்னும் கொஞ்ச நாளில்
இந்தியாவே காணாமல் போகும்.
மற்றொரு பெயரில்
இதை விற்று
ஏப்பம் விட்டிருப்பான் ஒருவன்!

—ஹேமா மணாளன், பம்பாய்—71.



## அன்றும் இன்றும் பூஜ்யமே.

அன்று —
பூஜ்யத்தைக் கண்டுபிடித்தது
இந்தியா! ஆம்!
ஒப்புக் கொள்ளவேண்டும்.
ஏனெனில்,

இன்று —
நாம் எத்தனை பூஜ்யங்களை
நமது பிரதிநிதிகளாகக்
கண்டுபிடித்துள்ளோம்!

—மா. பாலகிருஷ்ணன், தஞ்சை—7.

## வெள்ளம்

தமிழகமெங்கும் வெள்ளம்!
போடாத ரோடு!
வெட்டாத குளம்!
கட்டாத கரை — இத்தனைக்கும்
காசு வாங்கிவிட்ட
கண்ட்ராக்டர்களுக்கும்
அதிகாரிகளுக்கும்
பெருக்கெடுத்து ஓடுகிறது,
'மகிழ்ச்சி வெள்ளம்!'

—டி. ராஜப்பா, பட்டுக்கோட்டை.



## நிறைவேறிய வாக்குறுதிகள்!

எங்கள் தொகுதி எம். எல். ஏ.
கொடுத்த வாக்குறுதியைக்
காப்பாற்றி விட்டாராம்...
எங்களுக்கல்ல...
அவர் மனைவிக்கு...
வைர மோதிரமும்...
மகனுக்குக் காரும்...
மகளுக்கு மாடி வீடும்...!

—வலங்கை ஜி. ராஜசேகர்
வளையமாபுரம்.

## சத்துணவு ஆலயம்

அன்னச் சத்திரம் ஆயிரம்
வைத்தலே விட
ஆங்கோர் ஏழைக்கு
எழுத்தறிவித்தல் நன்றென்றார்!
ஆனால் இன்றோ!
அறிவு புகட்டும்
ஆலயம் எல்லாம்
அன்னச்சத்திரங்களாய்
ஆனது காணீர்!

—கே. வி. துளசிபாய், விழுப்புரம்—2.

## பன்னிருகை தா!

ஆமைப் புகையும் அருமைக் கொசு
வலையும்
ஊமைக் கனவாய் உதவாது
பன்னிருகை வேலா — கொசு அடிக்க
என்னிருகை போதாது உன் பன்னிருகைதா

—இல. வேங்கடரமணன், சேலம்—1.






16 பக்க வண்ணப் படக்கதை

# கடலைக் கடைந்த கதை

கதை: ஆனந்தி
படம்: வினு



---

**பிரச்னை தீர்ந்தது!**

மாவட்டச் செயலர் தேர்வில்
மாபெரும் போட்டி
'இருவரில் யாரைத் துண்டிப்பது?'
இந்தக் கேள்விக்கு வந்த பதில்:
'மாவட்டத்தைத் துண்டித்து விடு'
'பிரிந்தது மாவட்டம் இரண்டாக'
தேர்ந்தனர் இருவரும் செயலராய்.'

—சி. திருமூர்த்தி, மேட்டூர் அணை.

**கொல்லைப்புறம் இருப்பதை மறந்தாயே!**

சீதையைக் காணாது
எரிச்சலுற்ற இராமன் சொன்னான்:
ஏண்டா தம்பி,
வாசற்படியைத்
தாண்டாமல் இருப்பதற்கு
வரைந்தாயே ஒரு கோடு.
கொல்லைப்புறமும் ஒரு
கோடு வரைவதற்கு
உனக்கென்ன வந்தது கேடு?

—காசை. இளங்கோவன், சென்னை—4.

**''ரிஸர்வேஷன்''**

எம். பிக்கு இரண்டு
எம். எல். ஏக்கு மூன்று.
மந்திரிக்கு நாலு
மற்றவர்களுக்குப் பூஜ்யம்.
இதுதான்
இட ஒதுக்கீடு பாலிஸீ;
இன்றைய இந்தியாவில்
எல்லாத் துறைகளிலும்!

—வி. சங்கரன், தஞ்சாவூர்—9.

**பிடித்த படைப்பு!**

பொன் விழாக் கவிஞரை
வாலிப ரசிகர் புகழ்ந்துரைத்தார்:
''உங்கள் படைப்புக்களிலேயே
எனக்குப் பிடித்தது
எது தெரியுமா?''
ஆவல் மீற, கவிஞர்
கேட்டார்: ''எது? எது?''
உடன் பதில் வந்தது:
''உங்கள் கடைசி மகள்
கண்ணம்மாதான்...!''

—டி. கே. ராமமூர்த்தி, சென்னை—33.



ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி. ஐ. பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பெறும் அதிர்ஷ்டசாலி:

ரவீந்திரன் 'நடேஷ் ஷா,'
215, பெரியார் பாதை,
சூளைமேடு,
சென்னை—94.



"சம்பந்தி! என் பெண்ணைப் பிடிச்சிருக்குன்னு சொன்னதுலே ரொம்ப திருப்தி... வரதட்சிணை...?"—

"காலணா வேண்டாம்."—

"ரொம்ப தாங்க்ஸ்."—

"மிஸ்டர் பாரத்துக்கு நாலு டிக்கெட் வாங்கிக் கொடுத்தாப் போதும். எப்பப் போனாலும் டிக்கெட் கிடைக்க மாட்டேங்குது."—



"ஏய்யா! மோட்டார் சைக்கிள்ளே ஓவர் ஸ்பீடு போறே?"—

"சீக்கிரம் போகலேன்னா மிஸ்டர் பாரத் டிக்கெட் கிடைக்காதுங்க."—

"மிஸ்டர் பாரத் போறியா? இந்தா ரூபா. எனக்கும் நாலு டிக்கெட் வாங்கிக்கிட்டு வா!"—



# மரணத்தை அணைக்கும் மனச்சலனங்கள்



*திரைவிழா படக்கதை — 2*

குடிசையிலிருந்து ஜெலிஹான் வெளிப் பட்டாள். கையில் பக்கெட் இருந்தது. சீக்கிரம் தண்ணீர் எடுத்து வரவேண்டும். கணவன் வருவதற்குள் சமையல் வேலையை முடித்தாக வேண்டும்.

ஜெலிஹான் ஊற்றுக்கு அருகில் செல் லும்போதுதான் அவனைப்பார்த்தாள். அவன் மிக மெதுவாக அவளை நோக்கி வந்தான். அவன் முகத்தில் தீர்மானம்இருந்தது. கையில் பூங்கொத்து இருந்தது.

அவன் அருகில் வந்ததும் நின்றான்.

பூங்கொத்தை அவளிடம் நீட்டினான். ஜெலிஹான் அதைத் தவறவிட பூங்கொத்து வாளி நீரில் விழுந்து மிதந்தது. ஜெலிஹான் மிரண்ட பார்வையுடன் அவனை ஏறிட்டு நோக்கினாள்.

அவன் பேசாமல் ஒரு ஐந்து டாலர் நோட்டை எடுத்தான். அவளருகில் வைத் தான். நோட்டின் மீது ஒரு சிறு கல்லை வைத் தான். எதுவும் பேசாமல் அகன்று போனான். தூரத்தில் போய் நின்று அவளைக் கவனித் தான்.

ஜெலிஹான் மிகப் பயந்து போனாள்.

வாளியில் இருந்த நீரைக் கொட்டிவிட்டு, கிடுகிடுவென்று குடிசைப் பக்கம் ஓடினாள். உள்ளே நுழைந்து கதவைச் சாத்திக் கொண் டாள். சாய்ந்து கொண்டாள். மார்பு படபட வென்று அடித்துக் கொள்ள, வெளிக்கதவு தட்டப்படும் சத்தம் கேட்டது.

''யார்... யாரது?'' என்றாள் லேசாக நடுங்கும் குரலுடன்.

''நான்தான் ஜெலிஹான்...'' என்றான் அவள் கணவன்.

ஜெலிஹான் கதவைத்திறந்து அவன் மார் பில் சாய்ந்து விசிக்கத் தொடங்கினாள்.

''என்ன ஆச்சு?'' என்றான் நிமித்தின் பரபரப்பாக.

''உங்கள் சின்ன ஏகா இன்று என்னிடம் பூவும், பணமும் கொடுத்தான்.'' என்றாள் ஜெலிஹான்.

''என் சின்ன முதலாளியா?'' என்று நம்ப முடியாமல் கேட்டான் நிமித்தின்.

''ஆமா.''

''எதற்காக?''

''என்னைக் கேட்டால்?''

நிமித்தின் மிகக் கவலைப்பட்டான். அவன் வாழ்க்கையின் ஒரே சொத்து ஜெலிஹான். அவளை இழந்து விடப் போகிறோமா?

''நாளைக்கும் அவன் வந்து பணம் கொடுத்தால் வாங்கிக்க ஜெலிஹான். அவன் நோக்கம் என்னன்னு தெரியணு மில்லே...?''

தலையை ஆட்டினாள் ஜெலிஹான்.

மறுநாள் ஜெலிஹான் ஊற்று அருகில் இருந்த நேரம்.

குத்துக்காலிட்டு அமர்ந்திருந்தாள். பின் னால் குதிரையின் குளம்புச் சத்தம் கேட்டது. மிக லேசாகத் திரும்பிப் பார்த்தாள்.

சின்ன ஏகா, அவளுக்கு மிகப் பிடித்த வெள்ளைக் குதிரையில் வந்து கொண்டிருந் தான்...மெல்ல,மெல்லஒவ்வொருஅடியாகக் குதிரைக் குளம்புகளின் க்ளக், க்ளக், க்ளக். ஜெலிஹானின் தேகம் மெல்ல நடுங்கியது.

குதிரை அவளை நெருங்க, சின்ன ஏகா கீழே குதித்தான்.ஜெலிஹான் அசையாமல் அமர்ந்திருக்க, பின்னாலிருந்து நெருங்கினான்.

முந்தைய நாள் போலவே பணத்தை அவ ளருகே வைத்தான். ஜெலிஹான் அந்தப் பணத்தை எடுத்துக் கொண்டாள்.

சின்ன ஏகா, ஒரு வட்டக் கண்ணாடியை எடுத்துக் கையில் ஏந்தி அவளது தோளின் பின் பக்கத்திலிருந்து நீட்டினான். அந்தச் சின்ன கண்ணாடியில்தெரிந்தஜெலிஹானின் பிம்பத்தைப் பார்த்தான். பிம்பம் ஒரே ஒரு புன்னகைக் கீற்றைக் காட்டியது. அவ்வளவு

தான். சின்ன ஏகா அந்தக் கண்ணாடியை அவளது மடியில் விட்டுவிட்டுக் குதிரைமேல் ஏறிவிட்டான். தனக்குள் சொல்லிக் கொண்டான்:

'ஜெலிஹான்! எனக்குச் சொந்தமாக இருந்தது. உனக்குச் சொந்தமாகிவிட்டது. இனி உன்-நிழல் என் மீது நிச்சயம் விழும்.'

ஜெலிஹான் வீட்டில் நுழைந்தவுடன் நிமித்தின் அவளைக் கேள்வியுடன் பார்த்தான். ஜெலிஹான், சின்ன ஏகா கொடுத்த நோட்டை, உள்ளங்கையை விரித்துக் காட்டினாள்.

நிமித்தின் உடனே முதலாளி வீட்டிற்குப் புறப்பட்டான்.

பெரிய ஏகாவும், சின்ன ஏகாவும் உண வருந்திக் கொண்டிருந்தனர். பீங்கானில் முள் கரண்டிகள் க்ளிங் க்ளிங் என்று கொஞ்சிக் கொண்டிருந்தன.

''வா, நிமித்தின். என்ன விஷயம்?'' என்று கேட்டார் பெரிய ஏகா.

''நான் டவுன் வரைக்கும் போய்ட்டு வந்துடறேங்க. ஐயா சரின்னு சொல்லணும்.''

''எப்ப போறே நிமித்தின்...''

''இன்னிக்கு ராத்திரி போறேங்க. நாளைக்கு சாயங்காலம் வந்துடுவேங்க.''

''ராத்திரி வேளையில ஏன் போறே நிமித்தின்?'' என்று பெரிய ஏகா கேட்க, சின்ன ஏகா இடையில் புகுந்தான்., ''போய்ட்டு... வரட்டுமேப்பா... நீ போய்ட்டு வா நிமித்தின்...'' என்றான்.

''சரி'' என்று வெளியே வந்தான் நிமித்தின்.

மேலே நிலவு சலனமின்றிச் சென்றது.

நீறையக் கற்களால் நிரப்பப்பட்டிருந்த பாதையில் நிமித்தின் சிரமப்பட்டு நடந்து வீட்டை அடைந்தான். குடிசையின் ஒரு ஓரத்தில் கட்டப்பட்டிருந்த காளை ஒரு முறை திமிறியது. சேவல்களும், கோழிகளும்கூடைக்குள் இருந்து குச் குச் என்றன.

''ஜெலிஹான். நான் ஒளிஞ்சிக்கப் போறேன். சின்ன ஏகா வந்தா தைரியமா கதவைத் திறந்துவிடு. என்ன நடக்குதுன்னு பாத்துடுவோம்'' என்றான்.

ஜெயமன்மதன்





ஜெலிஹான் தலையை அசைத்தாள்.

இரவு!

ஜெலிஹான் பாயில் அமர்ந்திருந்தாள். குடிசைக்கு வெளியே கேட்ட ஒவ்வொரு ஓசைக்கும் நடுங்கினாள். நிமித்தின் குடிசையின் ஒரு ஓரத்தில் பீப்பாய்க்குப் பின்னால் பதுங்கி இருந்தான். காளை லேசாகத் திமிறியது.

வாசல் கதவு தட்டப்பட்டது.

"போய்க் கதவைத் திற" என்றான் நிமித்தின் ரகசியமான குரலில்.

ஜெலிஹான் வாசற்கதவைத் திறந்தாள்.

புதிதாய் ஷேவ் செய்த முகத்துடன் சின்ன ஏகா வாசலில் காத்திருந்தான். உள்ளே நுழைந்தான். ஜெலிஹானை உச்சி முதல் பாதம் வரை நோக்கினான்.

சிம்னி விளக்கின் மங்கலான ஒளியில் ஜெலிஹான் மிக அழகாக இருந்தாள்.

அன்பே..." என்றான். அவளை நெருங்கினான்.

பின்னால் நிமித்தின் சத்தமின்றிப் பிசாசு போல் வந்தான். சட்டென்று, இடதுகையால், சின்ன ஏகாவின் வாயைப் பொத்தினான். சின்ன ஏகா திமிற, "ஜெலிஹான், விளக்கை அணை" என்று அடிக்குரலில் சொன்னான் நிமித்தின். அவன் வலது கையில் கத்தி பளபளத்தது.

ஜெலிஹான் 'ஃப்பூ' என்று விளக்கை அணைக்க, அந்த இருட்டில் சின்ன ஏகா மீது நிமித்தின் கையில் பிடித்திருந்த கத்தி பாய்ந்தது. சின்ன ஏகா ஒரு முனகலைக் கூட வெளிப்படுத்தாமல் சரிந்து, இறந்து போனான். காளை, ஒரு முறை திமிறியது. கோழிகள் குச் குச் என்று ரகசியம் பேசின.

நிமித்தின் 'ஊம்' என்று ஒரு உறுமலை வெளிப்படுத்தினான்.

காளையின் கயிறை அவிழ்த்து வேறு இடத்தில் கட்டினான்.

அந்த இடத்தைத் தோண்டினான். வியர்வை கீழே முத்துக்களாய்ச் சிதறின.

குழி வெட்டி முடிக்கப்பட, சின்ன ஏகாவின் உடலை அதில் கிடத்தினான்.

கல்லையும், மண்ணையும் இறைத்து அந்தக் குழியை மூடினான் நிமித்தின். காளையைப் பழையபடி அவ்விடத்தில் கட்டினான்.

"இனிமேல் பயமே இல்லை, ஜெலிஹான்," என்றான், "நான் டவுனுக்குப் போய்ட்டு வந்துடறேன். அப்பதான் நம்ப மேலே எந்தச் சந்தேகமும் வராது" என்றான்.

வெளியில் புறப்பட்டான்.

காளை திமிற ஆரம்பித்தது. ஜெலிஹான் அந்தக் காளையைப் பார்த்து மிரண்டாள். அது 'ப்பா' என்று கத்தியது. ஜெலிஹானின் உடல் மிக நடுங்கியது.

நிமித்தின் மறுநாள் வந்தபோது ஜெலிஹான் அவனுடன் பேசவேயில்லை. நிமித்தின் வழக்கம்போல் வெளியே கிளம்பினான். பெரிய முதலாளியைப் பார்த்தான். சின்ன ஏகா காணாமல் போய் விட்டானென்று

இந்த முறை திரை விழாவில் ஒரு விசேஷம்! டெல்லியில், சென்னையில் நடந்து போன்ற வித்தி சார்ந்த சமாச்சாரங்கள் எதுவும் இல்லை. படங்களில் அத்தனை 'சூடான' காட்சிகள் இல்லை என்பது வேறு விஷயம்.



அடிக்கடி பத்திரிகையாளர் கூட்டங்கள். "நீங்கள் ஏன் பிரும்மாண்ட படம் டைரக்ட் செய்யக் கூடாது?" — என்று கேட்டபோது, அபர்ணா சென் (36, Chowringhee Lane புகழ்) கூறினார்: "ஐயோ, நிறைய பேரை டைரக்ட் செய்வது ரொம்பக் கஷ்டம். சில பாத்திரங்களை எடுத்துக் கொண்டு அவர்களை ஆழமாய் அலசுவதே எனக்குப் பிடிக்கும்."

தெலுங்கு சினிமா என்று ஒரு புத்தகம் வெளியிட்டார்கள். அந்த ஷார் பிலிம் நியூஸ் ஆனந்தன் யாரோ? மாதிரிக்குக் கிடைத்த ஒரு அந்தக் காலத்துத் தெலுங்குசினிமாஸ்டில்: மல்லேஸ்வரி.

நம்மூரில் இருந்து யாரும் வரவில்லையா என்று புலம்பியது நினைவிருக்கிறதா? முதல் வார முடிவில் ஒரு போர் படத்தைப் பார்த்துவிட்டு வெளியில் வந்தால், ஆச்சரியம்! பாக்யராஜ்! இவரைப் பற்றி அடுத்த வாரம் சில வரிகள்!!!

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி

## கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
நரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச் க்ரீம் (செவ்விள மஞ்சள்),
டெஸர்ட் பிரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.

LINTAS VIP M 10 2013 TM

# உங்கள் பத்மஸ்ரீ யாருக்கு ?

**போட்டி: 41**

ஒவ்வொரு ஆண்டும் குடியரசு தினத்தன்று பத்மஸ்ரீக்களும் பத்மபூஷண்களும் பல துறைகளைச் சேர்ந்த பலருக்கு வழங்கப்படுகின்றன. 'நமக்கு அதிகாரம் இருந்தால் இவருக்கு பத்மஸ்ரீ வழங்கி விடலாம்' என்று உங்களை நினைக்கச் செய்கிற, நீங்கள் நன்கறிந்த, உங்கள் மதிப்பில் உயர்ந்த ஒருவராவது நிச்சயம் இருப்பார். கல்கி மூலம் அவருக்கு பத்மஸ்ரீ வழங்கி மகிழுங்கள்! எதற்காக அவருக்கு பத்மஸ்ரீ வழங்க நினைக்கிறீர்கள் என்பதைக் கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்புங்கள். கூடுமானால் புகைப்படமும் அனுப்பலாம். (திருப்பி அனுப்புதல், கடிதப் போக்குவரத்து கிடையாது.). பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்கு வி. ஐ. பி. ஸூட்கேஸ் — குலுக்கல் முறையில். உறையின்மேல் "பத்மஸ்ரீ வழங்குகிறேன்" என்று குறிப்பிடவும்.

**முடிவு தேதி: 24.2.86.**

**இன்னும் 12 ஸூட்கேஸ்களே பாக்கி. 12 வாய்ப்புக்களை நழுவ விடாதீர்கள். வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறுங்கள்.**

**வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்**

என் பெயர்: ..................

விலாசம்: ..................

..................

அவனைத் தேடுவதற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்தார் பெரிய ஏகா. நிமித்தினையும் துணைக்கு அழைத்தார். தேடினார்கள். சின்ன ஏகா கிடைக்கவேயில்லை.

ஜெலிஹான் அந்த ஊற்றருகே வந்தாள். குதிரைமேல் சின்ன ஏகா வந்த காட்சி மெல்ல அவள் மனத்தில் உலா வந்தது. வீட்டுக்கு வந்தாள். காளை கட்டும் இடத்தில் அல்லவா அவன் புதைக்கப்பட்டிருந்தான்? அந்த இடத்தைப் பார்த்தாள். காளை அவளைப் பார்த்தவுடன் திமிறியது. கயிறை அறுத்துக் கொள்வது போல் குதித்தது. ஜெலிஹானுக்கு அந்தக் காளையைப் பார்க்கப் பார்க்க பயமாய் இருந்தது.

நிமித்தின் உள்ளே வந்தான்.

"இந்தக் காளையைப் பார்த்தால் பயமாக இருக்கிறது" என்றாள் ஜெலிஹான்.

"ச்சே. வாயில்லா ஜீவன். அது என்ன செய்யும்? நீ பக்கத்தில் வா" என்றான்.

ஜெலிஹான் அருகில் போகவில்லை. ஓர் ஓரத்தில் மரவட்டை போல் சுருண்டாள். அவளுக்கு அந்தக் காளையைப் பார்த்தால், பயமாகவும் இருந்தது. பரிதாபமாகவும் இருந்தது.

நிமித்தின் மேலே ஒன்றும் பேசப் பிடிக்காமல் கதவை அறைந்து சாத்திக் கொண்டு வெளியேறினான்.

ஜெலிஹான் வெகு ரகசியமாக வைத்திருந்த அந்த வட்டக் கண்ணாடியைக் கையில் எடுத்தாள். பார்த்தாள். கண்ணாடி வழியே சின்ன ஏகா ஏக்கத்துடன் பார்த்தான். ஒரு குதிரையில் கம்பீரமாக ஏறி அமர்ந்து அவளை நோக்கி வந்தான். அவளுக்காகவே வந்தான்.

ஜெலிஹானைத் திடீரென்று அந்த கோரக் காட்சி கண்களில் அறைந்தது. கத்திக் குத்துகளுடன் சின்ன ஏகா சரிந்த காட்சி. நிமித்தின் அவன் வாயைப் பொத்தி வயிற்றில் குத்திய காட்சி. சின்ன ஏகா புதையுண்டிருக்கும் இடத்தைப் பார்த்தாள். காளை துள்ளியது.

ஜெலிஹான் உடல் நடுங்க, குமுறிக் குமுறி அழத் தொடங்கினாள்.

"இப்போதெல்லாம் நீ என்கூட பேசவே மாட்டேங்கறே" என்றான் நிமித்தின்.

ஜெலிஹான், மௌனமாக இருந்தாள்.

"சண்டாளி, எதையாவது பேசேன். ஏன் பேசாமே இருக்கே. உனக்காகத்தானே நான் அந்தக் கொலையைச் செஞ்சேன். பேசேன். பேசேண்டி. நான் என்ன, ஒனக்கு அவ்வளவு தூரம் வேண்டாதவனாயிட்டேனா?"

ஜெலிஹான் பேசவில்லை.

நிமித்தின் அவள் தலைமயிரைப் பிடித்தான்., சுவரில் மோதினான். கன்னத்தில் அறைந்தான்.

"பேசேண்டி. செத்துப் போனவன்தான் உனக்கு என்னைவிட மேலாப் படறானா?"

# விபத்திலும் நகைச்சுவை



ஒருநாள் வேலூரில் நாடகம் முடிந்து கலைவாணரும் டி. ஏ. மதுரமும் இன்னும் ஒன்றிரண்டு பேர்களும் தனிக் காரில் சென்னை திரும்பினார்கள். முன்னால் போய்க் கொண்டிருந்த மற்ற நடிகர்கள் போன வான் விபத்துக்குள்ளாகித் தலைகுப்புறச் சாய்ந்து விட்டது. சிலருக்கு நல்ல அடி... ஆனால் நல்லவேளை உயிர்ச்சேதம் ஏதுமில்லை. இதனால் கவலை நீங்கிய என்.எஸ்.கேக்கு வண்டி தலைகுப்புறக் கிடக்கும் நிலையைப் பார்த்தவுடன் சிரிப்பு வந்தது. "இப்படிச் செய்ய எவன் நினைத்தாலும் முடியாதுப்பா. நம்ம டிரைவர் கில்லாடி தான்!" என்றார்.

அக்கம்பக்கத்திலிருந்த பலர் ஓடி வந்து என்ன நடந்தது என்று கேட்டார்கள். சர்வசாதாரணமாகக் கலைவாணர் சொன்னார்:

"உங்களை மாதிரி சில ஆளுங்க வந்து, காரோட இடது பக்கத்தைப் பார்த்திருக்கிறோம். வலது பக்கத்தைப் பார்த்திருக்கிறோம். டாப்பைப் பார்த்திருக்கிறோம். வண்டிக்கு அடிப்பாகத்தைப் பார்த்ததில்லை. பார்த்தால் தேவலை என்று ஆசைப்பட்டாங்க. அதுதான் அப்படிப் பண்ணியிருக்கிறது. எல்லாரும் இப்போதே பார்க்க வேண்டியதைப் பார்த்துக்குங்க... சென்னையிலிருந்து ஆள் வந்து அதைச் சீக்கிரமாத் திருப்பிடுவாங்க!"

பரந்தாமன் எழுதிய 'கலைவாணர் வாழ்வில்' என்ற நூலிலிருந்து. விலை ரூ. 14/-. வெளியீடு: பரந்தாமன் பதிப்பகம், எல்—23, தெற்கு போக் சாலை, சென்னை—17.

—சுப்ர. பாலன்.

ஜெலிஹான் பேசவில்லை. மௌனமாக அழுதாள்.

இரவு எப்படி விழிப்பு வந்தது என்று நிமித்தினுக்குத் தெரியாது. விழித்தான். இரவு ரகசியக் குரல்களில் முனகிக் கொண்டிருந்தது. பக்கத்தில் ஜெலிஹானைக் காணவில்லை.

கண்களைச் சுழற்றினான். மண் சுவர். வைக்கோல் போர். கோழிகளை அடைத்து வைத்திருந்த கூண்டு. அப்புறம்... நிமித்தின் திடுக்கிட்டுப் போனான்.

அவனுடைய ஜெலிஹான்... அவனுக்கே சொந்தமான ஜெலிஹான்... அந்தக் காளையைத் தழுவிக் கொண்டிருந்தாள். தழுவலில் சுகம் கண்டு, இன்பமாக முனகிக் கொண்டிருந்தாள். காளை அவளை மிக ஆதுரத்துடன் நக்கிக் கொண்டிருந்தது.

நிமித்தின், 'ஊஹூம்' என்று உறுமினான்.

ஜெலிஹான் அவளுடைய இன்ப உலகத்திலிருந்து சட்டென்று மீண்டு விலகினாள். நிமித்தினின் கோப முகத்தைப் பார்த்து அலறினாள். சின்ன ஏகா கொடுத்திருந்த கண்ணாடி அவள் மடியிலிருந்து உருண்டு கீழே விழுந்தது. காளை அவள் அண்மையை மிக விரும்பி அவளை நெருங்கி உரசியது.

நிமித்தின் மிக ஆத்திரத்துடன் பாய்ந்து உத்தரத்தில் செருகி வைத்திருந்த அந்தக் கத்தியை எடுத்தான். பாய்ந்து வந்தான்.

சட்டென்று காளையை அணைத்துப் பிடித்து...

சின்ன ஏகா சரிந்தது போல், காளையும் சரிந்தது, முனகல் எதுவுமின்றி.

ஜெலிஹான் விரிசல் கண்டிருந்த கண்ணாடியைப் பார்த்தாள். இறந்து கிடந்த காளையைப் பார்த்தாள். சின்ன ஏகாவை நினைத்துக் கொண்டாள்.

இனி அவள் வாழ்நாள் முழுவதுமேயே ஓயாத ஒரு அழுகையைத் தொடங்கினாள்.

நிமித்தின் ரத்தம் தோய்ந்த கத்தியுடன் வீட்டுக்கு வெளியே வந்தான். வெறித்த பார்வையுடன் தடுமாறினான்.

உடலும் மனமும் சோர்வுற்று நிமித்தின் சரிந்தபோது சின்ன ஏகாவை இரவெல்லாம் தேடிக் களைத்துப் போன பெரிய முதலாளி அந்தப் பக்கமாக வந்து கொண்டிருந்தார்.

திரையில் எண்பத்தெட்டு நிமிடங்களுக்கு ஓடும் MIRROR என்ற இந்தப் படம் கவர்மெண்ட் ஃபைல்களை விடவும் வெகு ஸ்லோ. ஷேவ் செய்து என்று ஒரு வார்த்தை இந்தக் கதையில் வருகிறதே — அந்த சோப் நுரைத்து கத்தி தீட்டும் காட்சி இருக்கிறதே — அந்த நேரத்தில் ஒரு சலூனில் மூன்று பேர் சுலபமாய்ச் சிகை அலங்காரம் செய்து கொள்ளலாம்! அத்தனை நிதானம். இருந்தாலும் கதையின் அந்தக் கடைசித் திருப்பம் ஒரு பெரிய சுவாரஸ்யம்.

* பெரிய சாரதா பாட, மாணவி அபிநயம் செய்கிறார்.

# பொன் மயமான

இன்றைக்கு முப்பத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்பு ஒருநாள் சென்னை, அடையாறு, பெஸண்ட் கார்டன்ஸ் வழியாக வந்து கொண்டிருக்கிறோம். அந்த இடத்தின் அமைதியும், மைனாக்களின் 'கீச்கீச்' சென்ற குரலும் எங்கேயோ கூவும் குயிலின் அக்கூ என்ற ஒலியும் நமது கருத்தைக் கவருகின்றன.



* ருக்மிணி தேவி.

நெருங்கி வரும்போதே, 'ஸரிகமபதநிஸ ஸநிதபமகரிஸ' என்று வீணையின் நாதம் கேட்கிறது. கலாக்ஷேத்திரா முதல்வர் வீட்டு வாசலில் உட்கார்ந்து திரிகால சாதகம் செய்கிறார் மாணவி சிவகாமி. கூடவே தாள ஒலி கேட்கிறது.

வீட்டினுள்ளே எட்டிப் பார்க்கிறோம். வீணைத் தாத்தா சாம்பசிவ ஐயர் வெற்றிலை இடித்துக் கொண்டிருக்கிறார். அதுவே சாதகம் செய்பவர்களுக்குத் தாளமாக அமைகிறது. கூடத்தில் தூணருகில் 'பிரின்ஸிபால் மாமி' தம் கணவர் செய்யும் பூஜைக்குக் குங்குமம் தயார் செய்கிறார், தன் கரத்தினாலேயே.

அங்கிருந்து கலாக்ஷேத்திரத்தைச் சுற்றி வருகிறோம். நடுவில் நிற்கும் பெரிய பங்களாவைச் சுற்றிக் கொண்டு போனால்,

''ஆதார முக கரி ராஜானி ப்ரோசின
வாஸு தேவுடே நீவு கதா''

என்ற கமாஸ் ராகப் பாடல் மிதந்து வருகிறது! முதிர்ச்சியடைந்த கமகப் பொழிவுள்ள கனமான சாரீரம். அதன் உருக்கம்



• சங்கரமேனன்.



• சாரதா.

# நினைவுகள்

கலாக்ஷேத்திராவுக்கு இது பொன் விழா ஆண்டு. சிறு வயதில் அந்த நிறுவனத்தில் மாணவியாகச் சேர்ந்து இன்று அங்கு நடன ஆசிரியையாகப் பணியாற்றி வரும் ஆனந்தி வண்ணைச் சிதறல்களாகச் சில நினைவுகளை எழுதுகிறார்......

மனத்தில் ஊடுருவிப் பாய்கிறது. பத்து மாணவ மாணவியர் கொட்டகையில் அமர்ந்திருக்கிறார்கள். ஒரு இளைஞர் தம்பூராவை மீட்டுகிறார். சற்று உயரமான இடத்தில் பொன் இழைகளால் பூவேலை செய்த பச்சை நிறச் சால்வை அணிந்து ஒரு முதியவர் பாடுகிறார். அவர்தான் பட்டணம் சுப்பிரமணிய ஐயரின் சீடரும் புகழ்பெற்ற வாக்கேயக்காரருமான மைசூர் வாசுதேவாச்சாரியரர் என்று அறிகிறோம். கமாஸ் ராகத்தில் ஸ்வரம் பாடத் தொடங்குகிறார் பெரியவர். அது என்ன கற்பனை! அருவி நீர் சலசலவென்று குதித்துக் கும்மாளி போட்டுக் கொண்டு பாறைகளின் மீது மோதிச் சுழன்று, குமிழியிட்டுத் திவலைகள் தெறிக்க ஓடிவருவது போல் பெருகுகிறது.

சற்று மாறுதலாக ஹரிகாம்போதி பாடிக் காட்டுகிறார் பெரியவர். ''இதுதான் பழைய ராகம்'' என்று கூறிவிட்டு, ''ஸாநிஸதநி பதநிஸா,'' என்று காகலி நிஷாதம் பிரயோகித்துப் பாடிவிட்டு, ''இது மாடர்ன் ராகம்'' என்று கூறிச் சிரிக்கிறார். மாணவர்கள் ஆகாகாரம் செய்து கொண்டே சிரித்து மகிழ்கிறார்கள். அந்தக் களங்கமற்ற சிரிப்பு முப்பத்திரண்டு ஆண்டுகளுக்குப் பின்னும் மனத்தில் பசுமையாக நினைவிருக்கிறது.

ஹாஸ்டலைச் சுற்றிக் கொண்டு கிழக்கு நோக்கிப் போகிறோம். சின்னஞ் சிறுமியர் பல வண்ண நிறங்களில் நாட்டிய உடை அணிந்து கொண்டு வருகிறார்கள். தட்டுக் கழியின் ஒலி டக் டக் என்று கேட்கத் தொடங்குகிறது. அது ஒரு மரங்கொத்தி எழுப்பிய ஒலியாக இருந்தால் கூட அந்தச் சூழலுக்குப் பொருத்தமாயிருந்திருக்கும்! குழந்தைகள் ஆடத் தொடங்குகிறார்கள்.

''தத் தெய் தாம் தித் தெய் தாம்''

அந்தப் பிஞ்சுக் கரங்களில் என்ன அழுத்தம்? இப்படி அறைந்து தட்டுகிறார்களே, கால்களை வலிக்காதா? ஆனால் அவர்கள் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை.

''தத் தெய் தா ஹா தித் தெய் தா ஹா.''

அடவுகள் தொடர்கின்றன.



* ருக்மிணி தேவியின் வகுப்பில்......

ஒருநாள் கலாக்ஷேத்திரம் திருவிழாக் கோலம் பூண்டிருக்கிறது. புதிய கோலங்கள் பளிச்சென்று விளங்குகின்றன. 'கண்ணாடிக் கொட்டகை' எதிரில் பவழமல்லிகை பூத்துக் குலுங்கிப் புஷ்பம் சொரிந்திருக்கிறது. அதனடியில் இருக்கும் நந்திபகவான் மீது மலர்கள் உதிர்கின்றன. மரமல்லிகை மரத்திலிருந்து உதிர்ந்த வெண்ணிற மலர்களின் சுகந்தம் பரவியிருக்கிறது.

வாஸுதேவாச்சாரியார் வால்மீகி ராமாயணச் சுலோகங்களுக்கு இசையமைத்திருக்கிறார். அதை வித்வான்கள் முதன் முதலாகப் பாடிக் காட்டப் போகிறார்கள். கேட்பதற்கு ருக்மிணிதேவி சங்கரமேனனுடன்* வந்து இறங்கி விட்டார். வீணை சாம்பசிவ ஐயர் தம்முடைய சிவந்த துண்டு தோளில் மிளிர வந்து விட்டார். இன்னும் சில ரசிகர்கள் குழுமி விட்டார்கள். ராமர் பட்டாபிஷேகப் படம் அலங்கரிக்கப்பட்டு விளக்குகள் ஏற்றித் தூபம் கமழ்கிறது. தீபாராதனை ஆகிவிட்டது.

சுருதியோடு சேர்ந்து நாட்டையில் பாடத் தொடங்குகிறார்கள். பஞ்சரத்ன ராகங்கள் தொடருகின்றன.

கூஜந்தம்ராமராமேதிமதுரம்மதுராக்ஷரம்
ஆருஹ்ய கவிதா சாகாம் வந்தே வால்மீகி
கோகிலம்

கௌளை ராகத்தின் இனிமையும், ராம நாமத்தின் மதுரமும், வால்மீகி முனிவரின் அக்ஷரங்களும் சேர்ந்து கேட்போரைப் பரவசப்படுத்துகின்றன.

காம்போதி ராகம் தொடங்கியதும் ஆகாகாரம் பரவுகிறது. சுமார் முக்கால் மணி நேரம் பாட்டு தொடர்கிறது. முடிந்ததும் காரைக்குடி சாம்பசிவ ஐயர், "நான் மட்டும் ஒரு மகர்ராஜாவாக இருந்தால் ஒவ்வொரு அடிக்கும் கோடி ரூபாய் கொடுத்திருப்பேன்" என்று நாத்தழுதழுக்கக் கூறுகிறார். ருக்மிணி தேவி அப்படியே வியந்து மகிழ்ந்திருக்கிறார். ஒரு நாட்டிய நாடகத்தின் தொடக்கம் இது.

மற்றொரு நாள் காலை வேளை, சீதா சுயம்வரம் அரங்கேறியாகிவிட்டது. கண்ணாடிக் கொட்டகையில் விரித்த புத்தகங்களுடன் எஸ். சாரதாவும் தட்டுக்கழி பலகையுடன் கமலாராணியும் பாயில் அமர்ந்திருக்கிறார்கள்.

"கஸ் சின்மயா நாபராதம்" — பாடுகிறார்கள்.

கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்த ருக்மிணிதேவி திடீரென்று, "உம் பண்ணு" என்றுகூறிக்கொண்டே கைகளால் ஹஸ்தங்களைச் செய்து காட்டுகிறார். (ராமபிரான் கைகேயியிடம் பேசுவதை நேரில் காண்பது போலிருக்கிறது.) இன்னொரு ராமாயணக் கட்டம் உருவாகிறது.

காலை நாட்டிய வகுப்பு, சாரதா நடத்துகிறாள். அத்தை சில நண்பர்களோடு வருகிறார். மாணவிகள் ஆடுவதைச் சற்று நேரம் பார்க்கிறார்கள். பிறகு அத்தை, "சாரதா!** நீ ஒரு வர்ணம் பண்ணிக் காட்டுகிறாயா?" என்று கேட்கிறார்.

குதித்து எழுந்த சாரதா கொட்டகையின் மத்தியில் வந்து நிற்கிறாள்.

"ஸகியே இந்த வேளையில்" என்று ஆனந்த பைரவி ராகத்தில் பாடத் தொடங்குகிறார்

* கலாக்ஷேத்திரத்தின் ஆரம்ப நாட்களிலிருந்து அதன் நிர்வாகப் பொறுப்பை ஏற்று ருக்மிணிதேவிக்கு வலக்கரமாக விளங்கி வருபவர்.

** சாரதா: கலாக்ஷேத்திரத்தில் பயின்று, நாட்டிய நாடகங்களில் பங்கேற்றுப் பிரகாசித்து, இன்று அந்நிறுவனத்திலேயே ஆசிரியராக இருப்பவர்.

பெரிய சாரதா.* விட்டல ஐயர் மிருதங்கத்தில் உசியாக வாசித்து நாட்டியத்துக்கு அழுத்தம் சேர்க்கிறார். பிறகு சாரதாவை மறந்து விடுகிறோம். மன்னார் கோவிலில் குடிகொண்டுள்ள ராஜகோபால சுவாமியின் அன்புக்காக ஏங்கிப் பரிதவித்து ஸகியைப் போய் அழைத்து வரும்படி கூறும் நாயகியைப் பார்க்கிறோம்.

"திகிரி சங்கேந்தும் செங்கை திகழ் ராஜ
கோபாலரை"

செந்தாமரைக் கையில் சங்கும் சக்கரமும் ஒளிவீசித் திகழ ஏந்தும் கண்ணன் ஆயர் குலச் சிறுவனாக மாடு மேய்த்ததை வர்ணிக்கிறாள் நாயகி. கோபாலன் குழலூதிக் குதித்து விளையாடியதைக் காட்டியபோது அந்த அழகான அசைவுகள் மனத்தில் நிலைத்து நின்று விடுகின்றன.

கையில் சாட்டையுடன் பசுவின்மீது ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டு மாயப் புன்னகை செய்து மயக்கும் ராஜகோபாலனின் தரிசனத்துக்காக நாமும் ஏங்குகிறோம்.

கேதாரகௌளை தில்லானா கற்றுக்கொடுக்கிறாள் சாரதா. சற்றுத் தளர்ந்தாலும் விடாப் பிடியாய், 'அரைமண்டியே இல்லை. இது என்ன நாட்டியம்?' என்று விரட்டுகிறாள். எட்டு ஆவர்த்தக் கோர்வையை மூச்சு வாங்கச் செய்து முடித்துவிட்டுப் பெருமையுடன் சாரதாவைப் பார்க்கிறோம். "சுசீலா! கிடதக தரி கிடதொம் சேரவே இல்லையே. மறுபடியும் ஆரம்பத்திலிருந்து செய்யுங்கள்" என்கிறாள் சாரதா.

ஒருகணம் திகைத்தாலும் மறுபடி செய்கிறோம்.

"நாத்ருத்தத் தீம் தொம்திருத்தத் தீம் தனனன்ன.

ஆனால் அப்படி உழைக்க வைத்த தன் பலனைப் பிற்காலத்தில் எல்லா மாணவிகளுமே உணர்ந்து நன்றியோடு நினைத்துக் கொள்கிறார்கள்.

பரீட்சை நடக்கிறது. பெரிய சாரதா டீச்சரும் வஸந்தா டீச்சரும் நடத்துகிறார்கள். புதிதாக ஒரு சுலோகம் பண்ணச் சொல்லியிருக்கிறார்கள். நான் ஏதோ கற்பனை செய்து கை பிடித்துக் கொண்டே வருகிறேன். ஒருகணம் வஸந்தா, சாரதா டீச்சரைப் பார்த்துப் புன்னகை செய்கிறார்; சாரதா டீச்சரும் சிரிக்கிறார். இதைவிட என்ன வேண்டும்? மார்க் என்ன போட்டால் என்ன? அந்த ஒருகண முக மலர்ச்சியில் கிடைத்த திருப்திக்கு ஈடே கிடையாது.

காட்சி மாறுகிறது. இடமே மாறிவிட்டது. திருவான்மியூர். 'மைசூர் மகாராஜா அடிக்கல் நாட்டிப் பேசிக் கொண்டிருக்கிறார். எங்கும் மணல் வெளி. பல கார்கள் மண்ணில் புதைந்து போகின்றன. தள்ளுவதற்கு ஒரு கூட்டம்.

ஏ. சாரதா, பத்மாஸனி, வஸந்தா, ஜெயா எல்லா டீச்சர்களும் ரோடு போட உதவுகிறார்கள். மாணவர்கள் சுறுசுறுப்பாக இயங்குகிறார்கள். அனல் காற்று உப்பும் மணலுமாய் வீசுகிறது. அஸ்திவாரங்களுக்காகத் தோண்டப்பட்ட பள்ளங்கள்.

"மாவும், முந்திரியும், நாவல் மரங்களும் பூத்துக் கனிந்து நிழல் அளித்த இடத்தை விட்டு இங்கு வந்து அஸ்திவாரம் போடுகிறார்களே. இது எப்படி உருவாகப் போகிறதோ" என்று மனத்தில் கவலையும் ஆதங்கமுமாய் இருக்கிறது.

மகா பட்டாபிஷேகம் தயாராகிறது. விபீஷண சரணாகதி, ஸேது பந்தனம் முதலிய காட்சிகள் மிக நேர்த்தியாக அமைந்து விட்டன. அதன் பிறகு போர்தானே! ஒவ்வொருவராக அசுரர்கள் மாய்வதுதானே! இந்த கட்டத்தை ருக்மிணிதேவி என்னமாய் உருவாக்கப் போகிறார் என்று எல்லோருமே ஆர்வத்தோடும், அக்கறையோடும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

எங்கிருந்துதான் கற்பனை தோன்றியதோ! நான்கு தேவ கன்னிகைகள் யுத்தத்தைப் பார்ப்பதாகவும், பார்த்து அதிசயிப்பதாகவும் வர்ணிப்பதாகவும் நாட்டியம் அமைத்து, அத்புத ரஸத்தை வடித்துக் கொடுத்துவிட்டார் ருக்மிணிதேவி. மகா பட்டாபிஷேகத்தில் எல்லோருமே எதிர்பார்க்கும் கட்டமாக இது அமைந்திருக்கிறது. அகத்திய முனிவர் ஸ்ரீராமருக்கு ஆதித்ய ஹ்ருதயம் உபதேசிக்கும்போது இந்த அப்ஸர ஸ்த்ரீகள் தோன்றி திக் பந்தனம் செய்து நிற்பதும் ஒரு சிலிர்க்கும் கட்டமாகத் திகழ்கிறது.

சங்கரமேனன் பிறந்த நாள். எம்.டி. ராமநாதன் கச்சேரி செய்கிறார். டி. என். கிருஷ்ணன் வயலின், டி. வி. கோபாலகிருஷ்ணன் மிருதங்கம், பொறுக்கி எடுத்த ரசிகர் குழாம். நூறு பேர்தான் இருப்பார்கள். ஆனாலும் கலைஞர்களுக்கு ஒரே உற்சாகம்.

கேதாரகௌளையை இப்படியும் பாட முடியுமா? சௌக்க காலத்தில் நிதானமாகப் பொன்னிழையாக இழுக்கிறார். அதில் தான் என்ன வர்ண ஜாலங்கள்! எம். டி. ஆரின் சுருதி சுத்தமான சாரீரமும், கேதார கௌளையை இழுத்து வளைத்துச் சுழற்றி அவர் பாடுவதும் கேட்டு அப்படியே பிரமித்துப் போகிறோம். கிருஷ்ணனும் அசாத்தியமாக வாசிக்கிறார். டி. வி. ஜி. யின் மிருதங்கத்திலேயே கேதாரகௌளை கேட்கிறது. முடிந்ததும் அத்தை ராமநாதனை அணைத்துக் கொண்டு, "இதற்கு என்ன கொடுக்க முடியும்? உங்கள் மூவருக்கும் என் பிரியத்தைக்

* பெரிய சாரதா: கலாக்ஷேத்திரத்தில் நீண்ட காலமாக பரதநாட்டிய ஆசிரியராகவும் நாட்டிய நாடக அமைப்பாளராகவும் ருக்மிணிதேவிக்குப் பக்கபலமாக விளங்கி வருகிறவர். இவரது அரிய கலைப் பணிக்காகச் சென்ற ஆண்டு மத்திய சங்கீத நாடக அகாடெமி இவருக்கு விருது வழங்கிக் கௌரவித்தது.

## "திருமலையானுக்கு வைரக் கிரீடம்"



அண்மையில் திருமலைப் பெருமாளுக்கு சுமார் ஆறு கோடி ரூபாய் மதிப்புள்ள வைரக் கிரீடம் செய்து அணிவிக்கப்பட்டுள்ளது. இதன் உயரம் 27.5 அங்குலம். 27 கிலோ எடையுள்ள 22 காரட் ''அபரஞ்சி'' தங்கத்தால் செய்யப்பட்டுள்ளது. 35,000 காரட் எடையுள்ள, 28,313 வைரக் கற்கள் பொதிக்கப்பட்டுள்ளன. வைரங்களின் மதிப்பு மட்டும் சுமார் 4.30 கோடி.

உலகத்திலேயே மிகப் பெரியதும், அதிக மதிப்புள்ளதுமான இந்த வைரக்கிரீடம் ''கின்னஸ்'' புத்தகத்தில் இடம் பெறப் போகிறது. இதை உருவாக்கிய தலைமை ஆசாரி தமிழ்நாட்டைச் சேர்ந்த ஜி. தர்மலிங்கம். இவருக்குக் கீழ் பணிபுரிந்த 42 ஆசாரிகளுள் 30க்கும் அதிகமானவர்கள் தமிழர்களே. கிரீடத்தை வடிவமைத்துக் கொடுத்தவர் கணபதி ஸ்தபதி. இவர் ஆந்திர அரசின் ஆஸ்தான ஸ்தபதி.

இக்கிரீடத்தை உருவாக்க செய்கூலி 8 லட்சம் ஆகும். ஆனால் பெங்களூரிலுள்ள சூரஜ் மல் நிறுவனத்தினர் கூலி பெறாமல் செய்து கொடுக்க முன் வந்தனர்.

தகவல், புகைப்படம்: **திருவேங்கடம்.**

---

கொடுக்கிறேன்'' என்று கூறுகிறார். என்ன அழகான நேரம் அது!

ருக்மிணிதேவியின் பிறந்த தினவிழா. பால்கிருஷ்ண சாஸ்திரிகள் 'ஜட பரதர்' கதையைத் தமக்கே உரிய பாணியில் சிரிக்கச் சிரிக்கசொல்லிக்கொண்டுவருகிறார். பேரரசனாக ஆட்சி புரிந்து, எல்லாவற்றையும் துறந்து நற்கதி அடைவதற்காகக் காட்டுக்கு வந்து தவம் செய்தவர் பரத முனிவர். தாயற்ற ஒரு மான் குட்டியைக் கண்டெடுத்து அதன் மீது வைத்த பாசத்தினால், மான்பிறவியடைந்து பிறகு மறு பிறவியில் ஜடமாகவே பற்றற்று வாழ்ந்து மன்னனுக்கு உபதேசம் செய்தவர். இந்த ஜடபரதருடைய கதையை சாஸ்திரிகள் சொல்லிக் கொண்டு வருகிறார்.

''பரதர் அனுஷ்டானம் பண்ணுகிறார். அப்போ அந்த மான்குட்டி ஓடிவந்து அவர் மீது ஆசையாக முட்டுகிறது. 'என் கண்ணே! வந்துட்டாயான்னார்! அனுஷ்டானமெல்லாம் மறந்து போச்சு. கொஞ்சம் நாழி மான் வராவிட்டால் அதுக்கு என்ன ஆச்சோன்னு கவலை வந்துடும்.''

இப்படி சாஸ்திரிகள் பரத முனிவரின் பாசம் ததும்பும் உள்ளத்தை விதவிதமாக வர்ணித்துக் கொண்டு வருகிறார்.

அத்தையை நிமிர்ந்து பார்க்கிறேன்; கண்களில் நீர் நிரம்பியிருக்கிறது. அவர் 'பிராணி மித்ரா' என்பது ஞாபகம் வருகிறது. அருண்டேல் ஹவுஸில் ஊஞ்சலில் வளர்ந்த அவருடைய அருமைக் கிளியின் ஞாபகம் வருகிறது. சமீபத்தில் இறந்து போன அந்தக் கிளியின் நினைவு அவருக்கு வந்திருக்குமோ!

கதை முடிந்ததும் அத்தை சாஸ்திரிகளிடம், ''பரதர் மாதிரியே எனக்கும் சில அனுபவம் ஏற்பட்டிருக்கு. ரொம்ப அழகாச் சொன்னேள்'' என்று கூறியபோது கிளியை நினைத்துக் கொண்டே பேசுகிறாரோ என்று தோன்றியது.

பல ஆண்டுகள் சென்றபின் ஒருநாள் திருவான்மியூர் கலாக்ஷேத்திரத்தில் நடந்து வருகிறோம். தென்னை மரங்களில் தேங்காய்கள் குலை குலையாய்க் காய்த்திருக்கின்றன. சிறு குழந்தைகளின் சிரிப்பொலியைக் கேட்டுக் கொண்டே வந்தால், வலதுபுறம் குளத்தில் அல்லி மலர்கள் பூத்திருக்கின்றன. இடதுபுறம் உள்ள குளத்தில் செந்தாமரை மலர்கள்.

''வன்னத் தாமரையைக் கண்டு வாயில்
மதுர கீதம் பாடிக் கொண்டு''

என்று பாடிக் கொண்டே நாட்டிய வகுப்பில் நுழைகிறேன்.

ஒரு சிறு பெண் குழந்தை, ''டீச்சர்! இதைப் பாருங்கோ டீச்சர். இந்த மகிழம்பூ என்ன வாசனையா இருக்கு?'' என்று சொல்லிக் கொண்டுவந்து தன் பிஞ்சுக்கையை விரித்துக் காட்டுகிறாள். இன்னொரு சிறுமி, ''இந்த மஜந்தா கலர் பூ உங்களுக்காகக் கொண்டு வந்தேன் டீச்சர்'' என்கிறாள். வாடாமல்லியின் நிறத்தை அந்தக் குழந்தை அனுபவிப்பதைப் பார்த்து நான் மகிழ்கிறேன். வெளியே குல்மோஹர் மரங்கள் பொன் நிறப் புஷ்பங்களைச் சொரிந்து, தரையே தெரியவில்லை. 'சரக் கொன்றைக்கும், குல்மோஹருக்கும் ஒவ்வொரு ஆண்டுமே பொன்விழாதான்' என்று எண்ணிக் கொள்கிறேன்.

— **ஆனந்தி.**

# கூடு தேடும் குருவிகள்

"இந்த எல்லையற்ற பிரபஞ்சத்தில் (பேரண்டம், **universe**), மில்லியன் கணக்கான நட்சத்திர மண்டலங்கள் (அண்டம், **galaxy**), பரிணமித்துப் பரவிக்கிடக்கின்றன. ஒவ்வொரு அண்டத்திற்கும் பல கோடி விண் மீன்கள் சொந்தம். அண்டத்திற்கு அண்டம் உள்ள தொலைவு பல கோடி ஒளியாண்டுகள். (நமது சூரியன் என்ற நட்சத்திரம் அடங்கியுள்ள அண்டத்தின் பெயர் **Milky way**) இவையெல்லாம் நமக்குத் தெரிந்தவை தான். ஆனால், பலருக்குத் தெரியாத விஷயம் ஒன்று உண்டு....."

ஆவல் அதிகரிக்கவே நிமிர்ந்து உட்கார்ந்து படித்தார் டாக்டர் பிரேம்சந்த்.

"நட்சத்திர மண்டலங்கள் யாவும், ஒன்றை விட்டு ஒன்று தலைதெறிக்கும் வேகத்தில் விலகி ஓடிக் கொண்டிருக்கின்றன. அதுவும், தனது நட்சத்திரங்களை நிலை பெயராமல் கூண்டோடு கடத்திக் கொண்டு ஓடுகின்றன. அதாவது, இந்தப் பேரண்டம் அதிவிரைவாக விரிவடைகின்றது. இந்த வரியை நீங்கள் படித்து முடிப்பதற்குள் பிரபஞ்சத்தின் விட்டம் சுமார் ஏழு லட்சம் மைல்கள் அதிகரித்திருக்கும்.... அத்தனை வேகத்தில்!"

அப்படியா!

"நட்சத்திரங்களின் ஒளியை, நிறமாலைமானி சோதனைக்கு உட்படுத்தியபோது, இக்கருத்து சந்தேகத்திற்கு இடமின்றி நிரூபிக்கப் பட்டது. அதாவது, நிறமாலையின் நீலப் பட்டைக்கு அருகே தோன்றும் கருங்கோடுகள் சிவப்பு நிறத்தை நோக்கி நகருகின்றன. காரணம், டாப்ளர் விளைவு. ஒளியின் (மற்றும் ஒலியின்) உற்பத்தி ஸ்தானம் நகரும்போது தான் இந்த நிகழ்வு (கருங்கோடுகளின் நகர்வு) சாத்தியம் என்ற டாப்ளர் விளைவு பற்றி உங்களுக்குத் தெரியும். ஆக, பிரபஞ்சம் அசுர வேகத்தில் விரிவடைகின்றது!"

ஒரு நோயாளி உள்ளே நுழையவே, படித்துக் கொண்டிருந்த விஞ்ஞானப் புத்தகத்தைக் கவிழ்த்துவிட்டு நிமிர்ந்தார் டாக்டர் பிரேம்சந்த்.

பின் இடுப்பைப் பிடித்துக் கொண்டே வந்தவனை, தன் பக்கத்தில் இருந்த சுழல் முக்காலியில் (சுழல் நாற்காலி என்பது எத்தனை தவறு!) அமர்த்தினார்.

முனகிக் கொண்டே அமர்ந்தான் அவன்.

"சொல்லுங்க."

"டாக்டர், ரெண்டு நாளா ஒரே வலி" என்றபடி, தன் வேட்டியை நெகிழ விட்டான் வந்தவன்.

அவன் அணிந்திருந்த பெல்ட் சிறிது கால தாமதம் செய்தது.

அதற்குள், பிரேம்சந்த் பற்றிச் சின்ன அறிமுகம்:

திறமையான மருத்துவர் என்ற பெயரைப் பெற்றதால், அவரிடம் பணம் சேர்ந்த அளவிற்குப் பகட்டு சேரவில்லை.

தனது தொழில் சம்பந்தப்பட்ட புத்தகங்களை மட்டும் படித்து, மூளைக்கு அணை கட்டும் பழக்கம் அவரிடம் கிடையாது. விஞ்ஞான அறிவைப் பல துறைகளில் பெருக்கிக் கொள்ள, எப்போதும் படித்துக் கொண்டே இருப்பார்.

தற்போதுகூட ஒரு வானவியல் புத்தகத்தைத்தான் மேய்ந்து கொண்டு இருந்தார்.

அவருக்கு எல்லா விஞ்ஞானிகள் மீதும் மதிப்புண்டு. முக்கியமாகச் சார்லஸ் டார்வின் மீது.

எதிர்ச் சுவரில் தொங்கும் டார்வினின் படமே அதற்குச் சாட்சி. டார்வினின் பரிணாமக் கோட்பாடுகளில் அடிக்கடி லயித்துப் போய்விடுவார் பிரேம்சந்த்.

குறிப்பாக, அவரின் 'திடீர் மாற்றக் கொள்கை' மீது பிரேம்சந்திற்கு ஒரு காதல்.

குரங்கிலிருந்துதான் கொஞ்சம் கொஞ்சமாக மாறி மனிதன் வந்தான் என்றால், இன்றும் பல குரங்குகள் மனிதனாக மாற வேண்டும் அல்லவா?

இந்தக் கேள்விக்குச் சார்லஸ் டார்வினின் பதில்தான் 'தி. மா. கொ.'

அதாவது, பரிணாமம் என்பது அனுவசியமாக நிகழாது. அதுவும் படிப்படியாகத்தான் நிகழ வேண்டும் என்ற கட்டாயமில்லை. தேவையைக் கருதி ஒரேமுறை, ஒரே தலைமுறையில் திடீரென்வும் (பரிணாமம்) நேர்ந்திருக்கலாம். அவசியமானால், மீண்டும் அது நிகழலாம். இதுவே திடீர் மாற்றக் கொள்கையின் சாராம்சம்.

உதாரணமாக, தரையில் உணவுக்கான தழை கிடைக்காமையால், ஒட்டகச் சிவிங்கியின் கழுத்து மந்திரம் போட்டது போல, 'சர்.....' ரென ஒரே தலைமுறையில், ஒரே நிமிடத்தில் அல்லது நாளில் கூட நீண்டிருக்கலாம்!

(நமக்குத் தெரியாத ஆதி நிலை பற்றிய அனுமானங்கள் இவை. நம்புவது அவரவரின் இஷ்டம்.)

ஒரு வழியாகத் தனது வேட்டியை இறக்கினான் நோயாளி.

அதற்குள், எதிரே சிரித்த டார்வினை ரசித்து, அவரின் கொள்கையை ஒருதரம் அசை போட்டுவிட்டார் பிரேம்சந்த்.

இராஜா பாலச்சந்தர்





"தோ, இந்தக் கட்டிதான் டாக்டர்."

பின் இடுப்பின் நடுவே, அவன் காட்டிய இடத்தில் சிவந்து போய் உருண்டையாக வீங்கியிருந்தது.

"எவ்ளோ நாளா?"

"ரெண்டு நாளாதான் டாக்டர்.... ஆ....! மெதுவா, ரொம்ப வலிக்குது டாக்டர்."

விரலால் அழுத்திப் பார்த்ததில் உள்ளே சீழ் இருப்பதற்கான அறிகுறி தென்படவில்லை. மிகவும் முரடாக இருந்தது அந்த வீக்கம்.

"இது கட்டியில்லை. வீக்கம்" என்றவருக்கு லேசான சந்தேகம், ஒருவேளை புற்றுநோயாக இருக்கலாமோ என்று.

எதற்கும் பரிசோதித்து விடுவது நல்லது. அதற்கான வசதிகள் அவர் மருத்துவ மனையிலேயே இருந்தன.

எனவே, குறிப்பெழுதி அந்த நோயாளியைப் பரிசோதனைக்கு அனுப்பினார்.

வேறு பேஷண்டுகள் இல்லாததால், (முக்கியமான கேஸ்கள் மட்டுமே அவரிடம் அனுப்பப்படும். மற்றவற்றைக் கவனிக்க அவரிடம் உதவி மருத்துவர்கள் உண்டு.) அவருடைய கவனம் மீண்டும் புத்தகத்தின் மீது திரும்பியது.

"இந்தப் பிரபஞ்சம் எவ்வளவு காலங்களுக்கு இப்படியே விரிவடைந்து கொண்டு இருக்கும்? சில விஞ்ஞானிகள் பிரபஞ்சத்தின் வடிவம் குவிவில்லை (**Convex lense**) போன்றது என்கிறார்கள். மற்றவர்கள் குழிவில்லை (**Concave lense**) வடிவம் எனக் கருதுகின்றனர். ஒருவேளை இந்தப் பிரபஞ்சம் குழிவில்லை உருவில் இருக்குமேயானால், ஒரு முடிவேயின்றி இந்தப் பிரபஞ்சம் விரிவடைந்து கொண்டே இருக்கும். ஆனால் குவிவில்லை வடிவமாக இருந்தால் ஓர் அளவு வரை விரிந்து கொண்டே போய், உச்ச நிலையை அடைந்ததும் விரிந்த வேகத்திலேயே சுருங்க ஆரம்பித்துவிடும்."

பிரேம்சந்த்துக்கு வியப்பாக இருந்தது. ஆனால் இவையெல்லாம் நம்பக்கூடிய விஞ்ஞான உண்மைகளே என்பது அவருக்குத் தெரியும்.





"டாக்டர், ரிப்போர்ட் ரெடி."

எடுத்துப் பார்த்தார். அவர் பயந்தபடி, அந்த நோயாளிக்குத் தோன்றியுள்ள சதைத் திரட்சி புற்று நோய்க் கட்டி அல்ல என்றது மருத்துவ அறிக்கை. சந்தோஷப்பட்டார்.

ஆனால், அது என்ன வீக்கம்?

"பயப்படும்படியா ஒண்ணுமில்லே. இப்போ வலி குறைய ஊசி போடறேன். நாளைக்கு வாங்க. அது என்னன்னு க்ளியரா செக் பண்ணிடலாம்."

அவன் சோர்வுடன் போனான்.

* * *

மருத்துவமனையில் தன் அறையில் பிஸியாக இருந்தார் ப்ரேம்சந்த்.

"டாக்டர்..... டாக்டர்."

அலறிக் கொண்டே ஓடி வந்தாள் ஓர் இளம் பெண். அவள் பின்னால் வந்தவனை அவருக்கு அடையாளம் தெரிந்தது. நேற்றுத் தனது பின் இடுப்பின் நடுவில் கட்டியென்று கூறி வந்தவன்தான். ஆனால், ஏன் இப்படி வருகிறான்?

முதுகை முன்பக்கமாக வளைத்துக்கைகளை வினோதமாக அசைத்தபடி......!

"யாரும்மா நீங்க?"

"நான் இவரோட மனைவி டாக்டர். காலையில் எழுந்ததுலே இருந்து ஏதேதோ உளர்றார். நடை வேறே சரியில்லே" அவள் விசும்பினாள். "எனக்குப் பயம்மா இருக்கு டாக்டர்."

"பயப்பட வேண்டாம். நான் செக் பண்றேன்."

அவன் வேட்டியை இறக்கிவிட்டு, அந்த வீக்கத்தைப் பார்த்தார். நேற்றைவிடப் பெரிதாக இருந்தது..... பல மடங்குகள்!

என்ன காரணம்?

அதில் விரல் வைத்து அழுத்திப் பார்த்தார். அந்த ஆள் கோரமாக அலறினான். என்னவோ பேசினான். ஒரு வார்த்தையும் புரியவில்லை.

நேற்றிருந்த மனநிலையில் அவன் இன்று இல்லை என்பதை அவரால் யூகிக்க முடிந்தது.

மேலும் பரிசோதித்ததில் அவ்வீக்கத்தினுள் சிறு எலும்புச் சில்லு துருத்திக் கொண்டிருப்பதை உணர்ந்தார் பிரேம்சந்த்.

"ஆ.... வலிக்குதே....." திடீரென அந்தப் பெண்ணும், தனது பின் இடுப்பைப் பிடித்துக் கொண்டு துடித்தாள்.

அவசரமாக, அவள் புடவையை விலக்கிப் பார்த்தார் பிரேம்சந்த்.

ஆச்சரியம்!

அவளுக்கும் அதே போல ஒரு கட்டி.

கணவனிடம் இருந்து மனைவிக்குத் தொற்றிக் கொண்ட புது விதமான மர்ம வியாதியா?

# உணர்வுகள் உறங்குவதில்லை



## வாசகர் கருத்து

* உணர்ச்சிப் போராட்டங்களை நன்கு சித்திரித்து எழுதி இருந்தார் ர. சு. நல்லபெருமாள்.

ஈரோடு—3. அருண்.

* 26 வாரங்கள் சென்றதே தெரியாமல் ஒரு வீட்டின் வெவ்வேறு பாத்திரங்கள், அவர்களின் உணர்ச்சிகள் மூலம் அழகான கதையை (உணர்வுகள் உறங்குவதில்லை) தந்த, கதாசிரியருக்கும், வெளியிட்ட கல்கிக்கும் எங்கள் நன்றி. முக்கியமாக, சக்திவேல் ஒரு மறக்க முடியாத பாத்திரம். ஒவ்வொரு பாத்திரத்தையும், சித்திரத்தின் மூலம் நிஜமாக்கிய ஓவியர் உமாபதிக்குப் பாராட்டுக்கள்.

பொறையார், திருமதி. சுரேஷ்குமார்.

* ''கடந்த இருபத்தி ஆறு வாரங்களாக எங்களின் உணர்ச்சிகளை நாவலோடு ஒன்ற வைத்துவிட்ட ''உணர்வுகள் உறங்குவதில்லை'' என்றென்றும் எங்கள் நெஞ்சை விட்டகலாது.''

கும்பகோணம், பி. சுவாமிநாதன்.

* தலைப்புக்கேற்ற வித்தியாசமான கதை முடிவுக்கு வந்தது வருத்தமாக இருந்தது. இந்தக் கதை அதீதமான கற்பனை இல்லாத, யதார்த்தத்தின் பிரதிபலிப்பு.

சிதம்பரம், திருமதி. எம். சித்தாமணி.

* நெஞ்சில் நிலைத்திருக்கும்படியாக, மற்றுமொரு கருத்துப் பெட்டகத்தை இருபத்தி ஆறு வாரங்கள், கதையாய்—வழங்கிய ர. சு. ந. அவர்களுக்கும், பக்கபலமாய்—ஓவியங்களைத் தந்த உமாபதிக்கும் பாராட்டுக்கள்.

ஈரோடு, ரேவதிப்ரியன்.

* தரமான படைப்புக்களைத் தொடர்ந்து தரும் 'கல்கி' இம்முறையும் ஏமாற்றவில்லை! ர. சு. நல்லபெருமாள் அவர்களின் 'உணர்வுகள் உறங்குவதில்லை' தொடர் மூலம் மீண்டும் இதை நிரூபித்துவிட்டது.

கோவை—23, எஸ். எச். பாரதி நஸீர்.

* ஏதோ முடிக்க வேண்டுமென்பதற்காகச் சப்பென்று முடித்திருக்கிறீரே, வாட்ஸ் ராங் வித் யூ மிஸ்டர் பெருமாள்?

குடியாத்தம்—2, ஸ்ரீ பட்டாபிஷேகப்ரியன்.

---

ஆனால், பிரேம்சந்தின் கணிப்பு தவறானது.

காரணம், வெளியே நிறைய அலறல்கள் கேட்டன. ஜன்னல் வழியாக வெளியே பார்த்தார் பிரேம்சந்த். பலர் தங்களின் பின் இடுப்பைப்பிசைந்தவாறுநெளிந்துகொண்டு இருந்தனர்.

நிச்சயம் இதே காரணம்தான் என்பது அவருக்குப் புரிய நெடுநேரம் ஆகவில்லை.

அடுத்த விநாடி, மேலும் ஓர் அதிர்ச்சி அவருக்கு.

நடந்து போனவர்கள் குனிந்து, இரண்டு கைகளையும் தரையில் ஊன்றி நடக்கத் தொடங்கினார்கள்.

ஏன்?

பரபரப்புடன் திரும்பித் தன் அறையில் இருந்த நோயாளிகளைப் பார்த்தார். அந்த இருவரும்கூட அதே முறையில், கைகளை உபயோகித்தபடி நடந்து அறையை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தனர்.

அவர் கூப்பிட்டதைஅவர்கள் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை.

அவர்களைப் பின் தொடர்ந்து வெளியே ஓடினார் பிரேம்சந்த். அடி மேல் அடி கிடைத்தது.

எதிரே இருந்த பல மாடிக் கட்டடத்தின் லிஃப்ட் காலியாக இருந்தது. மேல் மாடிகளில்வேலை புரிபவர்கள் எல்லோரும்சுவரில் பதிக்கப்பட்டிருந்த ஜன்னல் கம்பிகளைப் பிடித்தபடி இறங்குவதும், ஏறுவதுமாக இருந்தார்கள் — பெண்கள் உட்பட!

அவர்களின் காட்டுக் கத்தல்கள் பிரேம்சந்தின் காதைப் பிளந்தன.

'ஏன் இந்த விபரீத விளைவுகள்?' புரியாமல் தலையைப் பிய்த்துக் கொண்டார் அவர்.

கொஞ்ச நேரத்தில் ஆண் பெண் என்ற வித்தியாசமின்றி, எல்லோரும் தங்களின் உடைகளைக் கிழித்தெறிந்தனர்.

சுவர்களின் மீது அலட்சியமாகத் தாவியோடினார்கள். மின்சாரக் கம்பங்களில் தாவினார்கள். மின் தாக்குதலால் பலர் அலறிய படி மடிவதைமற்றவர்கள் பொருட்படுத்தவேயில்லை.

வெட்கமில்லாமல் பல காரியங்களைச் செய்தார்கள்.

பிரேம்சந்த் கூர்மையாகக் கவனித்தார். எல்லோருக்கும் பின் இடுப்பின் நடுப் பாகத்தில் ஒரே விதமான கட்டிகள்!

சில நிமிடங்களில் அவை 'சர்....'ரென நீண்டு.....

என்ன அது?

**வால்!**

அடுத்த நிமிடம் அனைவர் உடம்பிலும் உரோமங்கள் முளைக்க, மூஞ்சி நீள.....

ஓ! மனிதர்கள் ஒட்டு மொத்தமாகக் குரங்குகளாக மாறுகின்றார்களே!

இது எப்படி சாத்தியம்?

ஏன்?, ஏன்? ஏன்?

இமைக்கும் நேரத்திற்குள் அதன் காரணத்தை பிரேம்சந்த்தால் புரிந்து கொள்ள முடிந்தது.

உச்ச நிலையை அடைந்த பின்பு, இந்தப் பிரபஞ்சம் பழைய நிலைக்குத் திரும்பும் என்

பது போல, பரிணாமத்தால் குரங்கிலிருந்து மனிதனாக மாறிய மக்களும் பழைய தோற்றத்திற்குத் திரும்புகின்றார்களோ? அதாவது, அறிவின் உச்ச நிலையை எட்டிப் பிடித்த பின்?

அதுவும், டார்வினின் திடீர் மாற்றக் கொள்கையின் அடிப்படையில்?

ஒருவேளை பிரபஞ்சமும் தனது உச்ச விரிவைச் சந்தித்துவிட்டுத் திரும்பச் சுருங்க ஆரம்பித்துவிட்டதோ?

அதிர்ந்து போனார் பிரேம்சந்த்.

'நீ நினைப்பது சரிதான்' என்பது போல, தெருவெல்லாம் மனிதர்கள் சேஷ்டைகளில் ஈடுபட்டிருந்தனர்.

அவர்களை இனி மனிதர்கள் என்றால், அது இலக்கணப் பிழை.

குரங்குகள். அதுதான் சரியான வார்த்தை.

திடீரெனத் தமது பின் இடுப்பில் யாரோ ஈட்டியால் குத்துவது போன்ற வலியை உணர்ந்தார் பிரேம்சந்த்.

அங்கே பிடித்துக் கொண்டு கீழே விழுந்து துடித்தார். "நோ.... நோ...."

மிகவும் அகோரமாக அலறினார்.

அவருக்கும் அதே போன்ற வீக்கம்! தன் உருவம் மாறுவது அவருக்கே தெரிந்தது.

அது போதாதென்று, அப்போதுதான் குரங்காக மாறிய ஒரு புதுக் குரங்கு அவரிடம் தாவி வந்தது.

அவர் உடம்பு முழுவதும் தனது கூரிய நகங்களால் மகிழ்ச்சியாகப் பிறாண்ட ஆரம்பித்தது.

அலறினார் பிரேம்சந்த்.

"ஆ.... அம்மா.... ஆ.... ஆ... கியாபி... ப்வாதூ ரி... மாயீயீ...யீஜூர்ர்ர்... ...ர்ர்ர்... உர்ர்... எ... என்ன... யாரு.... ஆ.... க... கமலாவா?"

"ஆமா உங்க ஒய்ஃப் கமலாதான். என்னங்க, கனவு கண்டீங்களா? பயங்கரமா உளர்றீங்களே?"

அப்போதுதான் தனது படுக்கை அறையில் மனைவியுடன் படுத்திருப்பது பிரேம்சந்திற்குப் புரிந்தது.

தனது பின் இடுப்பைத் தடவிப் பார்த்தார். வலியும் இல்லை. கட்டியும் கிடையாது.

அப்படியென்றால், நடந்ததெல்லாம்? கனவு!

மனம் லேசானது.

"நீ எழுப்பினேயா கமலா?"

"ஆமா. என்னங்க கனவு?" கிண்டலாகக் கேட்டாள் மனைவி.

"இல்லை...."

* * *

மறுநாள் தன் கிளினிக்கில் சிறிது ஓய்வாக இருந்தார் பிரேம்சந்த். அந்தப் புத்தகம் நினைவுக்கு வந்தது. எடுத்தார்.

நேற்று விட்ட இடத்திலிருந்து தொடர நினைத்தபோது.....

ஓர் இளம் பெண் பதறிக் கொண்டே ஓடி வந்தாள். அவளுக்குப் பின்னால் நேற்று வந்த 'அதே' மனிதன்.

ஆனால், அவன் நடை ஏன் சரியில்லை?

* ப. விஜயபாலன், பம்பாய் — 23.

? அண்மையில் மறைந்த கலைக்கதிர் தாமோதரன் குறித்து...?

! கல்வித்துறையில் பல பதவிகள் வகித்து, பொறியியல் கல்வியில் தமிழகத்தின் மேன்மைகளுக்குப் பலவிதங்களிலும் காரண கர்த்தாவாக விளங்கியவர். கலைக்கதிர் அவருக்கு நிச்சயம் லாபம் அளித்திருக்காது. நஷ்டத்தைத்தான் ஏற்படுத்தியிருக்கும். இருந்தாலும் தமிழில் அறிவியல் பத்திரிகை இல்லை என்ற குறை இருக்கக் கூடாது என்பதற்காக, நல்ல முறையில் அதை நடத்தி வந்தார். வேறு தொழில்களில் ஈட்டிய செல்வத்தை இதற்கு ஏராளமாய்ச் செலவழிக்கத் தயங்காத பெருந்தகையாக விளங்கினார். இத்தகைய லட்சியவாதிகள்தாம் நாட்டுக்கும் மொழிக்கும் பெருமை சேர்க்கிறார்கள்.

* மு. மேத்தாப்பிரியன், துடுப்பதி.

? காங்கிரஸ் நூற்றாண்டு விழாப் பொருட்காட்சி மேடையில் ராஜீவ் காந்தி முன்னிலையில் நடந்த ஹாஜா ஷெரீப் Vs வைஜயந்தி மாலா நாற்காலிப் போட்டி பற்றி...?

! ராஜீவ்காந்தி அருகில் அடிக்கடி காட்சியளித்தாலே தாம் பிரதமர் மதிப்பிலும் மக்கள் மதிப்பிலும் உயர்ந்துவிடலாம் என்று வைஜயந்தி மாலா நினைப்பதாகத் தோன்றுகிறது. இது போன்ற செயல்களால் வைஜயந்தியின் மதிப்பு உயராது. தாழ்ந்து போகவே செய்யும். ஒரு விழாவில், அதுவும் பிரதமர் பங்கேற்கும் விழாவில் மேடை ஏற வேண்டிய அவசியம் உள்ளவர்கள் மட்டுமே படியேற வேண்டும். மற்றவர்கள் எவ்வளவு உயர்ந்தவர்களானாலும் பிரதமருக்கு நெருங்கியவர்களானாலும் எதிரே சபையில்தான் அமர வேண்டும். இது போன்ற அடிப்படைப் பண்பாடுகள் கூடப் புரியாதவர் இந்த எம். பி. என்பதை ராஜீவ் உன்பட எல்லோரும் புரிந்துகொள்ள உதவிய நிகழ்ச்சி இது.

* சி. கணேஷ், பெரியகுளம்.

? ஹெக்டே, என். டி. ஆர்., எம். ஜி. ஆர்., கருணாகரன் — ஒப்பிடுங்கள்?

! வேண்டாம். ஹெக்டேயின் மதிப்பை நான் குறைக்க விரும்பவில்லை.

* வெ. குமாரி, சென்னை — 93.

? கட்சிச் சின்னம் இரட்டை இலையாக இருப்பதால்தான் இப்படி எல்லா மாவட்டங்களையும் இரண்டாக்கி வருகிறார்களோ?

! மாவட்டங்களை மட்டுமா? கட்சியைக் கூடத்தான்!

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? மைதிலி என்னை காதலி — படப் பாடல்கள் எப்படி?

! பாடல்கள் ஹிட்டாகவே இருக்கட்டும், படம் என்னாச்சு? காதலித்து, கல்யாணம் நடந்து பிள்ளை பெறுகிற காலம் கூட வந்தாச்சே!

* த. ஸ்ரீனிவாசன், குடியாத்தம்.

? டைரக்டர் துரை வீட்டில் சினிமா பாணியில் கொள்ளை நடந்திருக்கிறதே?

! அவர் போலீஸில் புகார் கொடுத்த முறையும் போலீஸார் விசாரணை நடத்தும் விதமும் கூடப் புதிராக, மர்மப் படப் பாணியில்தான் அமைந்திருக்கிறது.

* ஸ்ரீ பட்டாபிஷேகப் பிரியன், குடியாத்தம்.

? எங்கள் ஊரில் தி. மு. க. பொதுக் கூட்டத்துக்கு வந்திருந்த இரா. வெற்றிகொண்



• ஹாஜா — ஷெரீப்.

ஜெயலலிதா மன்றங்களைக் கலைக்குமாறு எம்.ஜி.ஆர். கூறியிருக்கிறாரே?



• நாற்காலிப் போட்டி.

டான், என் சகோதரனின் ஆட்டோகிராஃபில் 'நாம் இந்தியன் அல்ல; தமிழன்' என்று எழுதிக் கையெழுத்திட்டிருக்கிறாரே? தங்கள் கருத்து?

! நான் முதலில் தமிழன், பிறகு இந்தியன் என்று கூறியிருந்தால் ஏற்கலாம். 'அல்ல' என்ற வார்த்தை அங்கு ஆட்சேபகரமானது. நன்றாகப் பாருங்கள், என்னவென்று கையெழுத்திட்டிருக்கிறார்? வெற்றி கொண்டான்தானே? வெறி கொண்டானில்லையே? இந்தக் குறுகிய பிரதேச வெறியை வெற்றி கொள்வாராக!

* கணேஷ்குமார், சேலம்.

? "இன்றைய தமிழ்த் திரை உலகில் கதையுள்ள சிறந்த படம் ஓடாது; கருவாட்டுச் சந்தையிலே கற்பூரம் விற்பனை ஆகாது". என்று விக கூறியிருக்கிறாரே!

! அட! 'பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் வைத்தியம் பார்க்கும்' ஸ்டைலில் குழப்பாமல் விக நேரடியாகப் பளிச்சென்று ஒரு விஷயத்தைச் சொல்லி விட்டாரே!

* கணேசன், செல்லூர். *

? குதிரைப் பந்தயத்தை அரசே ஏற்று நடத்தும் வகையில் மசோதா தாக்கல் செய்யப்பட்டிருப்பது எதைக் காட்டுகிறது?

! இதில் வேடிக்கை என்னவென்றால் குதிரைப்பந்தய நிர்வாகத்தில் ஏக ஊழல்கள் நடப்பதாகவும் அதனால் அரசு ஏற்று நடத்தப் போவதாகவும் காரணம் கூறப்படுவதுதான். அரசுத் துறையில் ஊழலே இல்லை, நடக்காது என்று நாம் நம்ப வேண்டுமாம்! லாட்டரி, குதிரைப் பந்தயம், சாராய வியாபாரம், ஆச்சு. அடுத்தது விபசார விடுதிகளை அரசு ஏற்று நடத்துவதை எதிர்பார்க்கத் தொடங்கலாம். பிறகு அரசு கஞ்சா வியாபாரத்தில் இறங்கலாம்; திருட்டுத் தொழிலை அரசுடைமையாக்கலாம்...!

* மு. மதிவாணன், அரூர்.

? அடுத்த ஆண்டு முதல் கள் — சாராயக் கடைகள் மூடப்படும் என்று நெடுஞ்செழியன் அறிவித்துள்ளாரே?

! கடந்த நான்கைந்து வருட அனுபவங்களை வைத்துப் பார்க்கும்போது இது, "நாளை முதல் குடிக்க மாட்டேன்" என்ற குடிகாரனின் அறிவிப்புப் போலத்தான்.

* பா. கிருஷ்ணதாஸ், கும்பகோணம்.

? எதில் சிக்கனம் கூடாது?

! தகுதியானவர்களைப் பாராட்டுவதில்.

* இரா. வேல்மணி, சின்னசேலம்.

? இந்தியக் கிரிக்கெட் மோசமடைந்து வரக் காரணம்?

! அப்படியொன்றுமில்லை. பல நேரங்களில் நமது தோல்விக்கு அம்பயர்கள் புண்ணியம் கட்டிக் கொள்கிறார்கள். நடக்கின்ற ஒன் டே ஸீரீஸிலும் நடந்து முடிந்த டெஸ்ட் ஸீரீஸிலும் பொதுவாக நோக்குமிடத்தில் நமது ஆட்டக்காரர்களின் முயற்சியிலோ, ஆட்டத் திறமையிலோ குறை கூறுவதற்கில்லை.



* சினிமா பாணி.



* தெள்ளத் தெளிவாக...

* சு. தியாகராஜன், நெய்வேலி.

? ஜெயலலிதா பெயரால் உள்ள மன்றங்களைக் கலைத்துவிடும்படி எம். ஜி. ஆர். கூறியுள்ளாரே?

! அந்தக் கட்டளை மீறப்பட்டு விட்டதையும் கண்டு கொள்ளாமல்தான் இருக்கிறார். வீரப்பனுக்குப் பழைய இலாக்காக்களை மீண்டும் கொடுத்திருக்கிறார். இந்த ஸீ—ஸா விளையாட்டு அரசியலில் இப்போது மேலோங்கியிருப்பது வீரப்பன்.

* ராமாபுரம் சந்துரு, சென்னை—59.

? ஒருவனுக்கு ஒருத்தி என்று கூறப்பட்ட ராமாயண காவியம் தோன்றிய நாட்டிலே... ஒருவனுக்கு ஒரு ஆசை நாயகி இருப்பதில் தவறில்லை என்று மறைமுகமாகப் போதிக்கும் சிந்து பைரவி, சின்ன வீடு போன்ற படங்களை நீங்கள் ஊக்குவிக்கலாமா?

! இந்தப் படங்கள் ஆசை நாயகி இருப்பதில் தவறில்லை என்று கூறவில்லையே? ஆசை நாயகி இருப்பதால் ஏற்படும் தொல்லைகளைத்தானே படம் பிடித்துக் காட்டி எச்சரிக்கின்றன! இதே கருத்தை ராமாயணமும் அடிக்கோடிட்டுக் காட்டுகிறதே!

---

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
கணேசன்,
செல்லூர் (அஞ்சல்),
திருநன்னாறு — 609 607.

* ஒப்பிட வேண்டாம்!



* லட்சியவாதி.



# மக்களைச் சந்திக்கவே 'மார்னிங் வாக்!'



* மகாலிங்கபுரத்தில்மக்களைச் சந்திக்கிறார் அமைச்சர்.

சென்னை, மகாலிங்கபுரத்தில் வசிப்பவர்களை ஒன்று சேர்த்து ஒரு சங்கம் வைத்திருக்கிறார், ரங்கராஜன். சங்கத்தின் நோக்கம்: தங்கள் பகுதியில் பொது சுகாதாரம், குடிநீர் பங்கீடு, சாலை நிலவரம் முதலானவற்றைக் கவனித்து, சம்பந்தப்பட்ட அதிகாரிகளோடு தொடர்பு கொண்டு உரிய நடவடிக்கைகள் எடுக்கச் செய்வது.

சென்ற ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் ஒரு நாள் ரங்கராஜனும் அவரது நண்பர்களும் கே. ஏ. கிருஷ்ணசாமியைத் தங்கள் பகுதிக்கு அழைத்துச் சுற்றிக் காண்பித்து ஒரு பெரிய கோரிக்கைப்பட்டியலும்கொடுத்தார்களாம். அவற்றில் முக்கால்வாசி கோரிக்கைகளை மூன்று மாத அவகாசத்தில் அவர் படிப்படியாக நிறைவேற்றிக் கொடுத்துவிட்டாராம்!

இந்தச் சுறுசுறுப்பைக் கண்டு வியந்து, இதைப் பற்றி அமைச்சரிடமே விசாரிக்கிறோம்.

"சென்னை ஒரு மாநகரம். இங்கே உள்ள ஒரு சட்டமன்றத் தொகுதிக்கு உறுப்பினராக இருக்க நேரிடும்போது சிறிதோ பெரிதோ எல்லாப் பொறுப்புகளையுமே ஒரு சேரக் கவனிப்பது அவசியமாகிவிடுகிறது. 'இது மாநகராட்சி கவனிக்க வேண்டிய விஷயம்' என்று சும்மா இருந்துவிட முடியாது. பல வருடங்களாக அதிகாலையில் உலாவப் போகும் பழக்கமுள்ள எனக்கு இப்போதெல்லாம் காலை நேரத்து நடை 'முன்னறிவிப்பு இல்லாத திடீர் சோதனை' நிகழ்ச்சியாகத்தான் இருந்து வருகிறது. ஒவ்வொரு நாளும் தொகுதியைச் சேர்ந்த ஒவ்வொரு பகுதியில் என்னுடைய 'மார்னிங் வாக்'கை வைத்துக் கொள்கிறேன்' என்கிறார் கே. ஏ. கிருஷ்ணசாமி.

தம்மிடம் தரப்படும் கோரிக்கைகளைத் தேதிவாரியாகக் குறித்து வைத்துக்கொண்டு, அவற்றின் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள், நிறைவேறிய கோரிக்கைகளின் விவரம், கோரிக்கைகள் இன்னும் நிறைவேற்றப்படவில்லையென்றால் அவற்றுக்கான காரணங்கள் ஆகியவற்றையும் எழுதி வைத்துக் கொள்கிறார், அவர். 'அடுத்த பத்து நாட்களில் நடவடிக்கை எடுக்கப்பட வேண்டிய கோரிக்கைகள்' என்றும் ஒரு பட்டியல் போட்டுக் கொள்கிறார்!

"ஒவ்வொரு பகுதியிலும் படித்த — விவரமறிந்த சிலரைத் திரட்டி, அப்பகுதிக்கான அடிப்படைத் தேவைகளைக் கண்டறிந்து என்னுடைய கவனத்துக்குக் கொண்டு வருமாறு அவர்களை ஊக்குவித்து வருகிறேன். இதற்கு நல்ல பலன் இருக்கிறது. ஒருவர் வீட்டுக்கு என்னை அழைத்து அங்கு நான் வரப்போகும் நாள் — நேரம் ஆகிய விவரங்களை முன்னதாகவே தங்கள் பகுதி மக்களுக்கு அறிவித்துவிடுகிறார்கள். நான் அங்கு போகும்போது ஒரே இடத்தில் பலரையும் சந்தித்துவிட முடிகிறது. என்னிடம் கொடுக்கப்படுகிற கோரிக்கைகள் எல்லாம் உடனுக்குடன் நிறைவேறிவிடும் என்று சொல்ல முடியாது. சில காலதாமதமாகக் கூடும். சட்டச் சிக்கல், நிதிப் பற்றாக்குறை போன்ற காரணங்களால் சில கோரிக்கைகள் நிறைவேற்றப்படாமலும் போகலாம். ஆனால், 'நம்மாலானதைச் செய்தோம்—செய்கிறோம்' என்கிற மனநிறைவு இரு தரப்பாருக்குமே கிடைக்க இது உதவுகிறது."

இந்த மனநிறைவின் ஒரு வெளிப்பாடாக ஒரு காரியம் செய்தார் கே. ஏ. கே. தமிழக நலவாழ்வு அமைச்சர் ஹண்டே செய்து வருவது போல், 1986 'புத்தாண்டு தொடக்கத்திலும், பொங்கல் தினத்தன்றும் கிடைக்குமாறு தம் தொகுதி வாக்காளர்களுக்குவாழ்த்துக்கடிதங்கள் அனுப்பி வைத்தார். அவர்களில் பலர் எதிர் கட்சிக்கு வோட்டளித்திருக்கக் கூடும் என்ற எண்ணம் கூட இதற்குக் குறுக்கே நிற்கவில்லை! இது ஆயிரம் விளக்குத் தொகுதி வாக்காளரிடையே மிகுந்த மனநிறைவை ஏற்படுத்தியுள்ளது.

— மலர்மன்னன்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani.

Editor: K. Rajendran.

# எமது குடும்பத்தில் நாலு பேர்!



எங்களது திருமணத்திற்கு பின் இரண்டு மாதங்களில் எமது குடும்பத்தில் வந்து சேர்ந்தது—பளபள வென்று கோத்ரெஜ். சில ஆண்டுகளுக்குப் பின் தீபக் பிறந்தான். அவனுக்கு இப்போது 12 வயது. நாங்கள் சேர்ந்து எவ்வளவு மகிழ்ச்சியாக இருந்திருக்கிறோம் தெரியுமா! நாங்கள் நால்வரும்தான்.



எங்கள் குடும்பத்திலேயே ஒன்றாக கோத்ரெஜையும் பாவிக்கிறோம் என்று அதன் மீது எங்களுக்குள்ள நம்பிக்கையே காரணம்.

நீடித்திருக்கும் மதிப்பிலே முன்னோடியான ரெ:ப்ரிஜெரேட்டர். தலைமுறை தலைமுறையாக. கோத்ரெஜ் வீட்டிற்கு வந்ததுமே, எங்களுக்குத் தெரியும் அதன் உறவு நீடித்திருக்கும் என்று!

நம்பகமுள்ள

**Godrej®** **ரெ:ப்ரிஜிரேட்டர்**

உயர்தொழில் நுட்பத்தில் உயரிய உற்பத்திகள், உயரிய மதிப்பு, எக்காலும்.

GBM 2